# இருநாடகம்


இலங்கைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியர்

க. கணபதிப்பிள்ளை

எழுதியவை.



கொழும்பு,

சாலிவாகனசகம் ௲௮௱௭௰௪

கர மாசி.

# இருநாடகம்

## பொருளோ பொருள்

## தவறான எண்ணம்

இலங்கைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியர்

**க. கணபதிப்பிள்ளை**

எழுதியவை.

கொழும்பு,

சாலிவாகனசகம் ௲அ௱எ௰௪

கர மாசி.

# பொருளோ பொருள்

## நாடகத்துள் வரும்
## அரிவையர் ஆடவர்

| | | |
|---|---|---|
| கமலவேணி | ... | கார்த்திகேசுவின் மகள். |
| மங்கையர்க்கரசி | ... | கமலவேணியின் தோழி. |
| இராசம்மா | ... | வடிவேலுவின் மச்சாள்; கார்த்திகேசுவின் உடன்பிறந்தோன் மகள். |
| வள்ளியம்மை | ... | இராசம்மாவின் தாய். |
| சின்னத்தங்கம் | ... | வடிவேலுவின் தாய்; கார்த்திகேசுவின் தங்கை. |
| கார்த்திகேசு | ... | இளைப்பாறிய ஓவசியர். |
| தாமு | ... | கார்த்திகேசுவின் வேலைக்காரன். |
| வடிவேலு | ... | கார்த்திகேசுவின் மருமகன். |
| கதிர்காமு | ... | வடிவேலுவின் நண்பன். |

ஏனையோர்: சோதிடர், குருக்கள், குருக்களின் சொக்கப்பையன், மோட்டோர்வண்டி செலுத்துவோர்.

கதை நிகழிடம்: யாழ்ப்பாணம், கொழும்பு.

ஆக்கியோன் கண்பரும்

இலங்கைப் பல்கலைக்கழக வேதிநூற்

பேராசிரியருமாயிருந்த

கலாபண்டிதர்

# ஆ. கந்தையா அவர்கள்

நினைவு வெளியீடு.

இவ்விரு நாடகத்திலும் வரும் மக்கள் இருபாலாரும் கற்பனாமூர்த்திகளே.

யாம் எவரையுஞ் சுட்டவில்லை.

# முன்னுரை

உலகியலை ஆதாரமாகக்கொண்டு எழுவது நாடகம். ஆகவே, அதில் வழங்கும் மொழிநடையும் உலகவழக்கை ஒட்டியதாயிருத்தல் வேண்டும். புத்தம்புதியனவாய் இவ்விருபதாம் நூற்றாண்டில் எழுந்த நாடகத் தமிழ்நூல்களுட் சில இக்கொள்கையை ஒருவாறு தழுவியனவாக அமைந்துள்ளன. இராவ் பகதூர் சம்பந்த முதலியார் எழுதிய நாடகங்களுள் தமிழ்நாட்டின் வடகோடியில் வழங்கும் கொடுந்தமிழ்நடை மிளிர்வதைக் காணலாம். முன்னெழுதிய **நாடகத்திற்** போலவே இவ்விருநாடகத்திலும் பொதுவாகத் தமிழ்நாட்டின் தென்கோடியாகிய ஈழத்திலும் சிறப்பாக யாழ்ப்பாணத்திலும் வழங்கும் பேச்சுத்தமிழ்நடை அமைந்திருக்கிறது.

இந்நாடகங்கள் இலங்கைப் பல்கலைக்கழகத் தமிழ்ச் சங்கத்து ஆண்டுவிழாக்களில் சங்கத்து நங்கையரும் நம்பியரும் கழக அரங்கில் ஆடியவை.

இந்நூலைச் செவ்வனே அச்சிட்டு எமக்கு உதவிய இலங்காபிமானி அச்சியந்திரசாலையாருக்கு எமது நன்றி உரியதாகும்.

"குணநாடிக் குற்றமு நாடி யவற்றின்
மிகைநாடி மிக்க கொளல்."

கொழும்பு,
கரஹூ மாசிமீ உகவ

**க. க.**

# பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| | | பக்கம் |
| 1. | பொருளோ பொருள் ... ... ... | 1 |
| 2. | தவருன எண்ணம் ... ... ... | 53 |

# பொருளோ பொருள்

அல்லது

# கார்த்திகேயன் வீழ்கை

## உறுப்பு I

### களம் 1

இடம்: யாழ்ப்பாணம், காத்திகேசு வீடு.

கமலவேணி ஓர் அறையில் இறேந்தை பின்னிக்கொண் டிருக்கிறாள். அப்போது மங்கையர்க்கரசி வருகின்றாள்.

மங். கமலம்! கமலம்!! கமலம்!!!

கமல. அதாரது? மங்கையே? வா மங்கை, இதிலை இரு.

மங். என்ன கமலி, என்னை நீ வரச்சொன்னதெண்டு தாமு வந்து சொன்னான். எப்ப வந்தனி கொழும்பாலை? எனக்குத் தெரியாது நீ வந்தது.

கமல. காலமைதான் வந்தனான். ஐயா ஒரு அலுவலாய் வெளியிலை போட்டார்; கதைக்கிறதுக்கு வீட்டிலை ஒருதருமில்லை. அதுதான் உனக்கு ஆளனுப் பினனான். மெய்யே, மங்கை, எப்படி உன்ரை பாடு? இஸ்கூல் என்ன மாறிவிட்டியோ, அல்லது அங்கை தான் இன்னும் படிப்பிக்கிறியோ?

மங் அங்கைதான் படிப்பிக்கிறன்; வேறை எங்கை போறது? றெயினிங் கொலிச்சுக்கு ஒரு அப்பிளிக் கேசன் போட்டனான். எடுபட்டால் போகலா

மெண்டு நினைக்கிறன். அப்பிடியெண்டால் உன்னையும் கொளும்பிலே அடிக்கடி காணலாம். அது கிடக்க; மெய்யே கமலி, இண்டைக்கு இறயில் யாழ்ப்பாண ஸ்டேசனுக்கு 10 மணிக்குத்தானும் வந்தது. என்ன சங்கதி?

கமல. அது இப்ப யாழ்ப்பாண றயிலுக்குக் கரிபோடுறயில்லையாம். காட்டு விறகுதானும் போடுறது. அதிலே, நெருப்புப்பொறி பறந்து ஒரு கொம்பாட்மன்றிலே நெருப்புப் பிடிச்சிட்டுது. அதாலேதான் லேற்ருய்ப் போச்சு.

மங் ஒவ்வொருநாளுந்தானே உப்பிடி நடக்குது. அது தான் கிடக்குது. உன்ரை படிப்புப் பாடெல்லாம் என்ன பருவத்திலே இருக்கு? எப்ப உதெல்லாம் முடிஞ்சு டொக்குத்தர் ஆகிறது?

கமல. இனியென்ன பைனல்தானே. இன்னும் ஒரு வரியத்தாலே அது பாஸ்பண்ணினுல் எல்லாம் முடிஞ்சு போடும்.

மங். அப்ப, கவனமாய்ப் படிச்சுப் பாஸ்பண்ணிப்போடப்பா.

கமல. பாஸ்பண்ணிப் போடுவன் எண்டுதான் நினைக்கிறன். இனி என்னவோ தெரியாது.

மங். உனக்கென்ன, அதிட்டஞ்செய்தனி. உனக்குத்தானே நல்ல கொளுத்தமாப்பிளை ஓண்டு இருக்குச் சீமையிலே. இக்கணம் அவரும் சிவில்சேவன்ருய் வந்தால், நீயும் டாக்குத்தர், இரண்டுபேரும் உழைக்கிற காசெல்லாத்தையும் என்ன செய்யப்போறியள்? ஒரு கோட்டைதான் கட்டிப்போட்டவேணும்போலே.

கமல. என்ன சொல்ருய்? அதாரப்பா உங்கை சிவில் சேவன்று?

மங் என்ன தெரியாததுபோலை கணக்கு விடுகிறாய். உன்ரை கொத்தான்; சின்னத்தங்கச்சியாற்றை மோன்தான்.

கமல ஆர், வடிவேலரைப்பற்றிச் சொல்றியோ? எடட, நல்லொரு கொத்தானைக் கண்டுபிடிச்சிட்டாய்?

மங். ஏன், அவருக்கென்ன?

கமல். என்ன பேய்க்கதை பேசிறாய்? உவங்களுக்கும் சிவில் சேவிசுக்கும் எவ்வளவுதூரம்? அதோடை உவை யின்ரை நிலைமை உனக்குத் தெரியாதே? உதுகும் ஏதும் நடக்கப்போற காரியமே?

கார்த்திகேசு உள்ளுக்கு வருகின்றார். இருவரும் அவரைக்கண்டு பேசாதிருக்கின்றனர். அப்போது மங்கையர்க்கரசி எழுந்து நிற்கின்றாள்.

கார். என்ன, பிள்ளை, மங்கையர்க்கரசி! நீயும் வந்திட்டியே? தங்கச்சி வந்தது உனக்கென்னெண்டு தெரியும்? ஏன் நிக்கிறாய்? இரன் இதிலை. தாமு, தாமு, எட தாமு.

(உள்ளுக்கு) ஏனையா.

கார். உந்தச் செம்புந்தண்ணியையும் ஒருக்காக்கொண்டாடா.

மங். தாமுதான் எனக்கு வந்து சொன்னான். இப்ப கொஞ்சத்துக்கு முந்தித்தான் வந்தனான்.

கார். (தாமு தண்ணீர்கொண்டுவந்து கொடுக்க அண்ணாக்காய்க் குடித்துவிட்டு, பின்னர் அவனிடம் செம்பைக் கொடுத்து) உந்த வெத்திலைத்தட்டத்தை ஒருக்காக் கொண்டாடா. (மங்கையர்க்கரசியைப் பார்த்து) தங்கச்சியும் நீயும் இதுபோலை எப்போதும் சிநேகிதமாய் இருந்துகொள்ளவேணும், பிள்ளை. ஒருத்தருக்

கொருதர் நல்ல உதவியாய் இருக்கவேணும். தாயில்லாப் பிள்ளைக்கொரு சிநேகிதி தேள்வைதானே.

தாமு. (வெற்றிலைத் தட்டத்தை அவருக்குக்கிட்ட கொண்டு வந்து வைத்துவிட்டு) வாடல் வெத்திலைதான் இருக்கையா. ஏதோ, இண்டைக்கு இறயில் வரப் பிந்திப் போச்சாம். நல்ல வெத்திலை இன்னும் வரயில்லை. உந்தக் கதிரேசன் கடையிலை வாங்கியரட்டே ஐயா?

கார். வேண்டாமடா, நீ போ.

மங். அதெல்லாம் ஒருபக்கத்திலை இருக்கட்டும், பாருங்கோ. உங்கடை மருமோன்ரை சேதியளெல்லாம் எப்படியிருக்கு? உங்களுக்கு அவர் தவால் எழுதிற இல்லையோ?

கார். (பாக்கு வெட்டிப் போட்டுக்கொண்டு) அதார் பிள்ளை, என்ரை மருமோன்?

மங். வேறை ஆர்? சின்னத்தங்கச்சியாற்றை மோன்தான். இப்ப சீமையிலை இருக்கிறவர். இப்பென்ன செய்யிறாராம்?

கார். அவன்களின்ரை கதைதான் கதை. உவங்களுக்கும் எங்களுக்கும் என்ன தொடர்பு. கதையுக்கை கதை, அவர் போன சிவில் சேவிஸ் பெயில்பண்ணிப் போட்டாராம். இரண்டுவரியம் முடிஞ்சுது; ஸ்கொலஷிப் காசும் நிப்பாட்டிப்போடுவாங்கள். இனிமேல் உவர் என்ன செய்யிறது? இப்ப பரிஸ்டருக்குப் படிக்கிறாராம். காசுக்கென்ன செய்யிறாரோ? அப்பிடித்தான் ஒருவிதமாய்ப் படிச்சுப் பாசுபண்ணினாலும் இஞ்சை வந்து, என்ன, மட்டையடிக்கப் போறாரே? மடையன், மூளை இருந்தால்த்தானே. அதென்ன, மெத்தையிலை வைச்சாலும் சருகுக்கை போறது சருகுக்கைதான். பாவக்கொட்டை போட என்ன சுரைக்கொட்டையே முளைக்கிறது?

## களம் 2

### இடம்: யாழ்ப்பாணம், இராசம்மா வீடு.

இராசம்மா பாட்டுப் பாடிக்கொண்டிருக்கிருள். முடிந்த வுடன் ஒரு புத்தகத்தை எடுத்துப் படிக்கின்ருள். அப்போது அதற்குள்ளிருந்து ஒருபடம் கீழே நழுவி விழுகின்றது. அவள் தாய் வள்ளியம்மையார் வருகின்ருள்.

வள்ளி. அந்த வேலிமுழுதும் கண்டாயங்களாய்க் கிடக்குது, மோனை. உந்த அடுத்தவீட்டுக் கிளைக்காலியள் முருங்கைக்காய் எல்லாத்தையும் புடுங்கிக்கொண்டு போட்டுதுகள். ஆக நாலு காய்தான் கிடந்தது. இதுதான் மோனை இண்டைக்குக் கறி. (வீட்டைப் பார்த்துவிட்டு) சீய், இந்தவீடு கிடக்கிற கிடையைப் பார். ஒருநேரம் நான் வீட்டிலை இல்லாட்டால் எல் லாந் தலைகீழாய்ப்போடும். என்னடி பிள்ளை, இதை எப்பன் கூட்டிவிடக்குடாதே? ஓராள் இருந்து உனக்கு நெடுகச் சொல்லிக்கொண்டிருக்கவேணுமே? உந்த நாசங்கட்டின விளக்குமாத்தையுங் காண யில்லை. எங்கையடி விளக்குமாறு?

இரா. உங்கினை தாவாரத்திலை பார்.

வள்ளி. (கூட்டிக்கொண்டு) என்ன, தண்ணி யள்ளி வைச் சிட்டியே?

இரா. சும்மா போணை அங்காலை. நானெல்லாம் எப்பவோ அள்ளிக்கொண்ணந்து வைச்சிட்டன். சும்மா புறு புறுக்கிறதுதான் உனக்கு வேலை. (திரும்பவும் வாசிக் கின்ருள்.)

வள்ளியம்மையார் கூட்டிக்கொண்டிருக்கும்போது இரா சம்மாவுக்குக் கிட்ட வீழ்ந்துகிடக்கும் படத்தை எடுத்துப் பார்க்கின்ருள்.

வள்ளி. என்னடிபிள்ளை, படமொண்டு விழுந்துகிடக்குது? இதார் இது? வடிவேலுவின்ரை படமோ?

இரா. (அவசரப்பட்டுப் படத்தை அவள் கையினின்று பறித்து) அது புத்தகத்துக்கை கிடந்தது. ஆற்றையோ எனக்குத் தெரியாது. (அதைப் புத்தகத்துக்குள் வைக்கின்றாள்.)

வள்ளி. ஏனடி எனக்கொளிக்கிறாய்? அவன்ரை படத்தை எனக்குத் தெரியாதே? ஏனடி மோனை, உனக்குந்த வேலை? உந்தப் பொடியன்ரை எண்ணத்தை விட்டு விடு. அவன் சீமைக்குப் போனவன். தனக்குத் தகுந்த பொம்பிளையெல்லோ கட்டுவான். நல்லாய் இங்கிலீசு படிச்சவளும் காசுக்காறியுமல்லோ அவனுக்குச் சோடி. நீயென்ன தமிள்தானே படிச்சிருக்கிறாய். கொஞ்ச இங்கிலீசு படிச்சாப்போலை போதுமே? கொய்யர் ஏதுங் காசுகீசு உனக்குத் தேடிவைச்சிட்டுச் செத்தவரே? சும்மா, அண்டாடு உரலடிச்சுத் திங்கிற எங்களுக்கு ஏன் உந்தப் பெரிய எண்ணம்?

இரா. சும்மா கிடவணை. உனக்கென்ன அறளைபேந்திட்டுதே? என்னைப் படிக்க விடமாட்டியே?

வள்ளி. சும்மா படிப்புத்தான் படிப்பு. உந்தப் படிப்பாலை இக்கணம் உன்ரை அருமந்த உடம்பைப் பளுதாக்கப் போறாய். பங்கை, உன்ரை பெரியையா கண்டாக்கர் இருக்கிறாரே; அவற்றை மோள் நெடுகப்படிச்சு இருக்கிறமாதிரி தெரியாதே? அருமந்தாப்போலை கண்டுக்குட்டிபோலை இருந்த பொட்டை; இப்ப உடம்பெல்லாம் நல்லாய்ப் பழுதாகி ஒரு ஈக்குப்போலை இருக்கு. கண்ணும் பளுதுபட்டு அறுவது வயதுசெண்ட

கிளவியள்போலே ஒரு கண்ணாடியும் போட்டுக் கொண்டு திரியுது.

இரா. சும்மா புசத்திக்கொண்டிராதையணே. கடைக்குப் போறதெண்டால் போட்டுவா செதியாய்.

வள்ளி. உண்ணணே உங்கப் படிப்பெல்லாம் என்னத்துக்கு? அல்ல, உங்களைக் கேக்கிறன். நீங்கள்தான் சொல்லுங்கோ. உவையெல்லாம் உங்கை படிச்சுப் போட்டு என்ன கால்ச்சட்டைக்குள்ளே பூரப் போகின மாமே. நாளைக்கு ஒரு ஏசண்டர்வேலையும் தங்களுக்கு வேணுமெண்டு கேப்பினமாக்கும். நல்ல புதுமையான பெண்டுகள்தான் இந்த நாளையிலே. உதெல்லாம் உந்த ஆம்பிளையளாலேதான் வந்தது. பெண்ணையன்கள். எங்கடை அவர் இருந்தாரே, பிள்ளையின்ரை தேப்பன். அவரைப்போலே ஆக்கள் இருந்தால் உவைக்கெல்லாம் நல்ல பாடம் படிப்பிச்சு, இருக்கவேண்டிய இடத்திலே இருத்தி வைச்சிடுவாங்கள். எல்லாம் தலைகீழாய்ப் போச்சு.

இரா. உனக்கென்ன பனி பிடிச்சிட்டுதே? உனக்கென்னத்துக்கு உந்த ஊருத் தொளவாரத்தை?

வள்ளி. சரி, சரி, அதுதான் கஞ்சல்க்கதை போகட்டும். இக்கணம் உந்தப் பெட்டையைத்தான் வடிவேலுவுக்குக் கட்டுவினமாக்கும். இப்ப இரண்டுபக்கமும் இனங் கொண்டாடாமல் பிறிஞ்சு இருக்கினம். எண்டாலும், உவைக்கும் இனி உதுபோலே ஒரு படிச்ச உத்யோகத்தன் எங்கை வரப்போறான்? காசுங் கிடக்கு. பெட்டையும் என்னென்னவோ எல்லாம் படிக்குது. உதைத்தான் கட்டுவினம். (பெருமூச்சு விட்டுக் கொண்டு) காசுள்ளவைக்குத்தானே காலம்.

## களம் 3

இடம்: **யாழ்ப்பாணம், கார்த்திகேசு வீடு.**

கமலவேணி ஒரு புத்தகம் படித்துக்கொண்டிருக்கிறாள். அப்போது மங்கையர்க்கரசி வருகின்றாள்.

கமல. அதாரது மங்கையே? வா, மங்கை, இதிலை இரு.

மங். உதென்ன புத்தகம் படிக்கிறியே? (வாங்கிப் பார்க்கின்றாள்.)

கமல. சும்மா இருந்து அலுத்துப்போச்சு; ஒரு புத்தகத்தை எடுத்துப் பாத்துக்கொண்டிருக்கிறன்.

மங். இதென்ன இது? இடாக்குத்தர்ப் புத்தகமே? இதெல்லாம் எங்களுக்கு விளங்குமே? இந்தா, நீதான் வைச்சுப் படி.

கமல. அது கிடக்கட்டும், ஏன் நேத்துப் பின்னேரம் வர இல்லை?

மங். பள்ளிக்கூடத்துக்கு ஒரு வேலையாப் போட்டன். அதுதான் வரயில்லை.

கமல. உதேன் உந்தக் குடையை வைச்சிருக்கிறாய்? உதிலை வையன்.

மங். மறந்தெல்லோ போனன். (குடையை வைக்கின்றாள்.)

கமல. நல்லாய்க் களைச்சுப்போனாய்போலை கிடக்கு. என்ன வெய்யிலுக்காலை வாறியோ?

மங். ஓம், சரியான வெய்யில்.

கமல. அப்ப பின்னைக் கொஞ்ச மோர் குடியன்.

மங். ஆங், பின்னைக் கொண்டாவன்.

(கமலவேணி மோர் வார்த்துக்கொண்டுவந்து கொடுக்கின்றாள்.)

மங். (மோர் குடித்துக்கொண்டு) மெய்யே கமலம், உனக்கொரு சங்கதி தெரியாதே?

கமல. என்னது?

மங் உன்ரை கொத்தான் வடிவேலுவைப்பற்றித்தான்.

கமல. ஆ, அதுதான் கதை. அதை விட்டுப்போட்டு வேறை ஏதும் இருந்தால் பேசு.

மங். அதல்ல, இப்பேன் வந்தனான் எண்டு உனக்குத் தெரியுமே?

கமல. சொல்லன்.

மங். இப்ப ஒரு தந்தி வாசிச்சுப்போட்டு வாறன்.

கமல. என்ன தந்தி? ஆருக்கு?

மங். நான் வீட்டையிருந்து நாளைக்குப் படிப்பிக்கிற பாடத்தை ஆயத்தம் பண்ணிக்கொண்டிருந்தன். அப்ப, வடிவேலுவின்ரை தாய் சின்னத்தங்கம் ஒரு தந்தியைக் கொண்டந்து, இதை வாசிச்சுச் சொல்லு பிள்ளை யெண்டு சொன்னா. ஆள் தந்தியைக் கண்டதே மிச்சம் பயந்துபோனா.

கமல. பேந்து?

மங். பின்னை நான் உடைச்சு வாசிச்சன்.

கமல. என்ன எழுதிக்கிடந்தது?

மங். அதிலை வடிவேலு சிவில் சேவிசிலை பாசுபண்ணி விட்டதாக இருந்துது.

கமல. அப்பிடியோ? அப்ப, இப்ப கிட்டடியிலை நடந்த சோதினையிலையாக்கும். மனிசிக்கு நல்ல அதிட்டம். அவ்வளவுதானே? வாறதைப்பற்றி ஒண்டும் இல்லையே?

மங். அவ்வளவுதான். வாறதைப்பற்றி ஒண்டும் இல்லை. அதுதான் உனக்குச் சொல்லவேணுமெண்டு வந்தனான். கொய்யா எங்கை?

கமல. அவர் பிறக்கிறாசிவீட்டை போட்டார்.

மங். ஏன் அங்கை?

கமல. வள்ளியம்மையாரவை எங்கடெட்டை வைச்ச ஈட்டைச் சித்தாரிக்க.

மங். பாவம், அந்த இராசம்மாப் பெட்டை; அதின்ரை தோட்டந்தானே.

கமல. அதுக்கு ஆரும் என்ன செய்யிறது? ஈடு வைச்சால் திருப்பிக் காசு குடுக்கத்தானே வேணும். இல்லாட்டா ஆரும் சித்தாரிப்பினைதானே.

## களம் 4

### இடம்: யாழ்ப்பாணம், சின்னத்தங்கம்வீடு.

கார்த்திகேசு சின்னத்தங்கம் வீட்டுக்குள் வருகின்றார்.

கார். மோனை, தங்கச்சி, சின்னத்தங்கம்.

உள்ளுக்கு அதாரது?

கார். அதேன், நான்தான்; காத்தியேசு.

சின்ன. (பரபரப்போடு வெளிவந்து) அதென்னண்ணை? ஒரு நாளும் வராதனீங்கள், என்னவும் தொந்தறவோ? ஆருக்கும் வருத்தம் கிருத்தமோ?

கார். சாய், ஒண்டுமில்லைத் தங்கச்சி. சும்மா இதாலை போனனான். ஒருக்கா உன்னையுங் கண்டுகொண்டு போவம் எண்டிட்டு வந்தன். எப்பிடி உன்ரைபாடு?

சின்ன. சுகமாய் இருக்கிறன். ஏனண்ணை நிக்கிறியள்? இருங்கோவன் இதிலை. (ஒரு கதிரையை இழுத்து விடுகின்றாள்.)

கார். இருப்பம் பிள்ளை. (இருக்கிறார்) இதேன் இந்தவீடு மேயயில்லை? மளை பெய்ஞ்சால் இக்கணம் ஒழுகப் போகுது.

சின்ன. உவர் கந்தெரெட்டைச் சொன்னனுன். அவர் வர யில்லை.

கார். இந்த நாளையிலை உவங்களைத் தடம்போட்டுத்தான் பிள்ளை, பிடிக்கவேணும். மிலிற்றறிக் காசெல்லே?

சின்ன. தண்ணி வென்னி ஏதும் குடிக்கப்போறியளே ?

கார். வேண்டாம்; இப்பான் உதிலை குடிச்சிட்டுவாறன். ஒரு வாய்க்கு வெத்திலை இருந்தால் கொண்டா, தங்கச்சி.

சின்னத்தங்கம் வெற்றிலை கொடுக்கின்ருள்.

கார். (இருந்து வெற்றிலைபோட்டுக்கொண்டு) தம்பியின்ரை தவால்கிவால் வாறஇல்லையே? நெடுக நிண்டுகொண் டான். எப்ப இந்தப் பக்கம் வாருராம்?

சின்ன. சோதினை பாசுபண்ணினதெண்ட தந்திக்குப் பிறகு, முந்தநாள்தான் ஒரு தவால் வந்துது. கெதியாய் வாறனெண்டு எளுதியிருக்கிருன். ஏதோ உடுப்போ கிடுப்போ தைக்கவேணுமாம். அது முடிஞ்சஉடனை மினைக்கெடாமல் வாருனும்.

கார். ஏதுங் காசுகீசு அனுப்பவேணுமெண்டால் சொல்லு தங்கச்சி, தாறன். இல்லாட்டால் நானே அனுப்பிவிடுறனே. அதைப்பற்றி ஒண்டும் யோசி யாதை.

சின்ன. அதுகளைப்பற்றி ஒண்டும் எளுதஇல்லை. காசாலை ஒருமுடையும் இல்லைப்போலை. அதோடை போக யுக்கை காணி ஈடுவைச்சு ஒரு ஆயிரம் உறுவாயும் குடுத்துவிட்டனுன். அவன் சரிக்கட்டிக்கொண்டு வருவான்.

கார். ஓ, அவன் கெட்டிக்காறன்தான். சின்னப் பிள்ளை யிலும் அப்பிடித்தானே. என் உவனைப் படிப்பிச்ச

சட்டம்பிமாரே விண்ணுதி விண்ணன்களெல்லே. அப்பவே சொன்னுங்கள் எனக்கு, அவன் ஒரு பெரிய கெட்டிக்காறனுய் வருவானெண்டு. அப்பிடியே வந்திட்டான். அவன் சிவில் சேவிஸ் பாசுபண்ணினது எங்கள் எல்லாருக்கும் ஒரு பெரிய பெருமையும் சந்தோஷமுந்தான், தங்கச்சி.

சின்ன. என்னண்டாலும் அது காலுக்குக் கையுக்குப் பொல்லாபத்து ஒருக்கா இஞ்சை வந்து சேரட்டும். எல்லாத்துக்கும் கதிர்காமத்தையன் கண்முளிக்கவேணும்.

கார். அதுகிடக்கட்டும், தங்கச்சி. உன்னை ஒண்டு கேக்க வேணுமெண்டு நெடுக நினைச்சுக்கொண்டு இருந்தனுன். அது இண்டைக்குத்தான் தருணம் வந்துது. உங்கினை உள்ளவங்கள் ஆரும் இஞ்சினை வந்துகிந்து தங்கச்சி, அதுதாறன், இதுதாறன், அதுசெய்யிறன், இதுசெய்யிறன், எண்டுசொல்லி உன்னை ஏமாத்தப் பாப்பாங்கள். இடங்குடுத்திடாதை. நான்தானே, எங்கடை குடும்பத்துக்கை ஒரு பெரிய ஆள், என்ன? எல்லாத்தையும் நானே கொண்டுநடத்திக்கொள்ளுவன். என்ன விளங்குதே?

சின்ன. ஓமண்ணை.

கார். அதோடை என்ரை பணமெல்லாத்தையும் என் பிறத்தியுக்கை விடுவான். அதுக்காகத்தான் என்ரை பிள்ளையையும் உவ்வளவு செலவுவிட்டு மெத்த மேலான படிப்புப் படிப்பிச்சனுன். நான் நினைச்சது போலை எல்லாம் சரிவந்திட்டுது. போயிலை கிடக்கே தங்கச்சி?

சின்ன. தாவடிப் போயிலை கொஞ்சங்கிடந்துது. ஒளிஞ்சு போச்சு. அச்செளுவான்தான் ஒரு நுள்ளுக் கிடக்குது.

கார். அது போதும் பிள்ளை. இனி, அவனுக்குத் தகுந்த பொம்பிளையள் உவன்ரை படிப்புக்கு ஏத்தவிதமாய் வேறை ஒரு இடமும் பிறத்தியுக்கைகூட எடுக்க முடியாது. அதோடை, எங்கையெண்டாலும் வெளியிலை கொண்டுதிரியிறதுக்குத் தகுந்த பளக்க வளக்கங்கள் தெரிஞ்ச பொம்பிளையாய் வேணும். அதுக்கெல்லாம் தக்கபடி என்ரை பிள்ளையைக் கொளும்பிலைவிட்டு நல்ல இங்கிலீசுப் பளக்கம் பளக்கியிருக்கிறன். இந்தப் போயிலை நல்ல காரமாய்க் கிடக்கு, பிள்ளை. தலையெல்லாம் வேர்க்குது.

சின்ன. அப்ப பின்னைத் தண்ணி கொண்டரட்டே அண்ணை?

கார். வேண்டாம்பிள்ளை.

சின்ன. கிட்டத்தான், அண்ணை, இருக்கு.

கார். சாய், சாய், வேண்டாம் தங்கச்சி. அதோடு ஒரு வீடும் கொளும்பிலை வாங்கி நானும் பிள்ளையும் போய் இருக்கப்போறம். பிள்ளை கெதியாய் இடாக்குத்தருக்குப் பாசுபண்ணிவிடுவாள். தம்பியும் அதுக்கிடையிலை வந்திடுவான். இரண்டுபேரையும் சேத்துவிட்டால் எல்லாருக்கும் ஒரு பெருமையும் நன்மையுந்தான் தங்கச்சி. இனிமேல் இரண்டுபேருஞ் சேந்து உழைச்சுங்கொள்ளுவினம். அவளுக்கும் நெடுகக்கூட அவனிலான் ஒரு வாரப்பாடு; என்ன உனக்குத் தெரியாதே தங்கச்சி?

சின்ன. தெரியும், தெரியும்.

கார். அவையை ஏன் நாங்கள் பிரிச்சுவைப்பான்? இதுக்கு என்ன தங்கச்சி சொல்றுய்?

சின்ன. ஓ, பின்னை, நீங்கள் சொல்றபடி செய்யுங்கோவன். தேப்பன் இல்லாப்பிள்ளை. நீங்கள்தானே எல்லா அலுவலும் அதுக்குப் பாத்துவைக்கவேணும்.

# உறுப்பு II

## களம் 1

இடம்: கொழும்பு, கார்த்திகேயபிள்ளை வீடு.

கார்த்திகேயபிள்ளை தலைப்பாகை முதலியவற்றோடு வீட்டு நடசாலையில் நின்று உலாவுகின்றார்.

கார். தாமு, தாமு, எட தாமு!

தாமு. (சட்டையை அவசரப்பட்டுத் தெறிமாறிப் போட்டுக் கொண்டு ஓடிவந்து) எனையா?

கார். அந்தப் பூக்கண்டுகளை எடுத்துச் சரியா வை. வைச் சிட்டு இவடம் எல்லாத்தையுங் கூட்டிவிடு.

தாமு. ஓமையா (பூக்கன்றை அரக்குகின்றான்.)

கார். எடே, அதைத் தூக்கி இதிலை வை, இதை எடுத்து அப்பிடி வை. இதுகும் உனக்குச் சொல்லவேணு மே?

தாமு. ஓமையா (பூக்கன்றுகளை கார்த்திகேயபிள்ளை சொன்ன மாதிரி வைக்கிறான்.)

கார். (கதிரையில் இருந்துகொண்டு) எடே! அதுக்கெல் லாம் தண்ணி வாத்தாச்சே?

தாமு. ஓமையா, வாத்திட்டன்.

கார். வெளியிலை போறத்துக்குக் காறெல்லாம் ஆயத்தமாய் இருக்கே. அதை ஒருக்காப் போய்ப்பார்.

தாமு. ஓமையா (வெளியிலே போகின்றான்.)

கமலவேணி வருகின்றாள்.

கமல (நடசாலையில் உலாவிக்கொண்டு பூச்செடியில் ஒரு பூவைப்பிடுங்கிக் கொண்டையில் வைத்துக்கொண்டு) ஐயா, இதாரிந்தப் பூச்சட்டியெல்லாத்தையும் அரக்கி வைச்சது? நான் நேத்து நல்லவடிவாய் வைச்சனுன். இண்டைக்கெல்லாம் மாறிவைச்சுக் கிடக்குது.

கார். உந்த மோடனுக்கம். இப்பென்னே செய்தான் உங்கினை நிண்டுகொண்டு. எட தாமு!

தாமு. (உள்ளே) வாறன் ஐயா.

கார். கெதியாய் இஞ்சை ஓடியாடா (தாமு உள்ளே வருகின்றான்) இதைப் பிளையாய் வைச்சிட்டியாமடா. சரியாய் வை. எத்தினைமுறையடா உனக்குச் சொல்றது.

தாமு பூச்சட்டிகளை எடுத்துச் சரியாய் வைக்கிறான்.

கமல. (தாமுவைச் சுட்டிக்காட்டிச் சிரித்துக்கொண்டு) இவன்றை கோற்றைப் பாருங்கோ, ஐயா!

தாமு. (சட்டையைத் திரும்பித் திரும்பிப் பார்த்துத் துடைத்துக்கொண்டு) என்னம்மா, கரி பிரண்டிருக்கே?

கார். எட நாட்டுப்பயலே; கோற்றுப்போட்டு எந்தநாள் பளகினது? அதென்ன, இதுகளை எப்பெண்டாலும் கண்டிருந்தாலெல்லோ. என்னடா மாட்டுக்கொட்டிலுக்கை கிடந்திட்டு வாறியே? லோண்டரிக்காறனெட்டைக் குடுத்து நேத்துத்தானே வாங்கித் தந்தனுன். என்ன துயில்போலை வெள்ளையாய்க்கிடந்தது. இப்ப முளுப் பிசாணுய்க் கிடக்குது. சனி நாயே. நானில்லாட்டா நீங்களுங் கொளும்பு காணிறதே?

தாமு. இங்க இளவு நாசத்தையெல்லே போட்டுப் பளக்கமில்லை. (திருப்பித்திருப்பிச் சட்டையை அணிகிறான்.)

கார். (மகளைப்பார்த்து) கொளுப்பு மாதிரி இவனுக் கொண்டுங் தெரியாது, பிள்ளை. இடைக்கிடை சொல்லிக் குடுக்கவேணும். உன்ரை 'றிசல்ட்' (result) இண்டைக்கு வந்தது. விசிற்றுக்கு எத்தனையோ பேரெல்லாம் கடமையாய் வருவினம். உவனை இண்டைக்கு மாத்திரம் இஞ்சினை ஆக்கள் வந்திருந்தால் வெளியிலை வரவிடாதை.

கமல. அவன் ஏதோ சொல்வளி பறைவளி கேட்கிறவனே? போகவேண்டாமெண்ட இடத்துக்குத்தான் கட்டாயம் போய்த் தீருவான்.

கார். (தாமுவைப் பார்த்து) எடே, குடிக்கிறதுக்கு ஏதுங் கொண்டுவா.

தாமு. ஓமையா (போகின்றான்.)

கார். அப்ப மோனை, இனிமல் சுணங்காமல் வெளிக்கிடுவம். அதோடை கொத்தான் வடிவேலு அடுத்த கப்பலிலை வாறனெண்டு உன்ரை மாமி ஒருதவால் எழுதியிருக்கிறா, இஞ்சான் வந்து நிப்பான். அதுக்குத்தான் அந்த முன்னறைக்கு ஒரு பெட்றாம் சூற்று (Bed-room Suite) டொன் கறோலிசிலை (Don Carolis) ஓடர் பண்ணவேணும் இண்டைக்கு. உனக்கென்ன வேண்டவேணுமெண்டனி?

கமல, எனக்கொரு ரெனிஸ் றுக்கெற்றும் (Tennis racket) ஒரு கிமோனோவும் (Kimono) கோல்டு வாட்சும் (Gold Watch) வேணும். என்னெட்டைக் கிடக்கிறது நல்லாய்ப் பளசாப் போச்சு.

கார். சூ, ஊருப்பட்ட காசு வரப்போகுது இக்கணம். ஒரு நூறு பவுண் கேட்டு நிக்குதுபோலை. சரி, பின்னை வெளிக்கிடன்.

கமலவேணி கைப்பையைத் (hand-bag) திறந்து பௌடர் போட்டுவிட்டு, கண்ணாடியைப் பார்த்துச் சொண்டுக்கு மை தீட்டுகின்றாள். தாமு தண்ணீர் கொண்டுவந்து கொடுத்துவிட்டு அவள் செய்வதை ஆச்சரியத்தோடு பார்த்த வண்ணம் போகும்பொழுது தட்டுப்பட்டுக் கையில் இருந்த திறேயோடு (tray) கீழே விழுகின்றான்.

**கார்.** (கோபமாய்) அடே, Dirty fool.

**தாமு.** ஓமையா.

## களம் 2

### இடம்: கொழும்புத் துறைமுகம்

கப்பற்காரர் இருவர் வெண்சுருட்டுப் புகைத்துக்கொண்டு அங்குமிங்கும் உலாவுகின்றனர். வடிவேலு கப்பலால் வந்திறங்கிச் சில பெட்டிகளுடன் ஓர் இடத்தில் நிற்கின்றான். துறைமுகப் பொலிசுக்காரன் ஒருபக்கத்தில் நிற்கின்றான். கூலிக்கார்ச் சாரதி ஒருவன் வடிவேலுவிடம் வருகின்றான்.

**சார.** மாஸ்டர், உவயர் கோயிங்? குட் கார், பெயர் வெரி சீப், கான் ஷோ ஓல் றவுண், கான் கோ மவுன்ற் லெவினியா, ஷீ பாதிங், தேட்டில் சூப், வெரி குட், ஓர் கோயிங் கண்டி? சீ பெரஹெரா; நைஸ் சயிற், பிளௌன்றி கேள்ஸ், ஒன் த வே கான் பய் குட் கருநற்; வெரி சீப், வெரி நைஸ்; வட் மாஸ்டர் சேயிங், ஓல் றயிட்?

**வடி.** (புன்னகை செய்துகொண்டு) சும்மா போ, ஓய். எனக்குக் கார் வேண்டாம்.

அப்போது கார்த்திகேயபிள்ளையும் மகளும் அவனிடம் வந்து சேருகின்றனர்.

கார். என்ன தம்பி, இதிலே நெடுகக் காத்திருக்கிறியே? நான் சரியான நேரத்துக்குத்தான் வாறன்; (சட்டைப் பையிலிருந்து மணிக்கூட்டை எடுத்துப் பார்க்கின்ரூர்) கப்பல் வெள்ளெண வந்திட்டுதோ?

வடி. ஓம் அம்மான்; வரவேண்டிய நேரத்துக்குக் கொஞ்சம் முந்தித்தான்.

கார். (மகளைக் காட்டி) இவவைத் தெரியுந்தானே தம்பி? இவ என்னுடை மகள்.

வடி. (தொப்பியை உயர்த்தி) How do you do?

கமல. Very well thank you. Had a nice voyage?

வடி. Oh yes, very pleasant, extremely pleasant.

கார். உனக்குத் தெரியுமோ என்னவோ தெரியாது தம்பி இவ இப்ப இடாக்குத்தர் ஆகிவிட்டா.

வடி (ஆவலாய்) ஆ! மெய்தானே? அது எப்பகூட?

கார். போன சோதினையிலே பாசுபண்ணினது. போன கிளமைதான் அப்போயின்மன்று (appointment). இந்தநாளையிலே லேடி டாக்குத்தர்மார் இஞ்சை மெத்தக் குறைவு. எண்டாலும், உத்தியோகம் எடுக்கிறது ரெம்பக் கஷ்டம். உங்கினை உள்ள ஆக்களைப் பிடிச்சு வேலைசெய்து அவங்களுக்கு ஒருவிதமாய்க் கைப் பச்சை கட்டி உத்தியோகம் எடுத்துக்குடுத்திட்டன். இப்ப லயின் கோமிலே (Lying in Home) வேலை செய்யிரு.

வடி. ஓ, ரெம்ப நல்லது. எனக்கு மிச்சம் சந்தோஷம்.

கார். அப்பேன் தம்பி, நெடுக இதிலே நிப்பான்? வீட்டை ஆறுதலாய்க் கதைப்பம்.

வடி. நீங்கள் இப்ப போங்கோ அம்மான். கதிராமு இப் பெண்ணைக் கப்பலிலே வந்து சந்திச்சது. வேறை

ஆரோடையோ உங்கினை கதைச்சுக்கொண்டு நிக்குது. இப்ப வந்திடும். அவரை விட்டிட்டு வாறது சரியில்லை. நீங்கள் போங்கோ, நான் அவர் வீட்டை போட்டு, சேக்கிறற்றேறியற்றிலும் (Secretariat) போய் றிப்போட்பண்ணிப்போட்டு உடனை வாறன். உங்கடை வீடு கதிராமுவுக்குத் தெரியுந்தானே?

கார். ஓ ஓ; அவருக்கு நல்லாய்த் தெரியும். மறந்து போகக்கூடாது. பிள்ளையும் கொஸ்பிற்றலுக்குப் (hospital) போகவேணும். நாங்கள் போறம். கட்டாயம் வந்திடு.

வடி. ஓமம்மான்

கார். (சிறிதுதூரம்போய், திரும்பி) கட்டாயம் வந்திடு. அங்கை நீ தங்கிறதுக்கு வேண்டிய வசதியெல்லாஞ் செய்திருக்கு; உடனை வந்திடு.

வடி. ஓமம்மான். நான் சுணங்கயில்லை. நீங்க வாருங்கோ.

கார். அப்ப வாறம்.

கமல. Cheerio.

கார்த்திகேயபிள்ளையும் கமலவேணியும் போகின்றார்கள். அப்போது கதிர்காமு வருகின்றான்.

கதிர். என்ன வடிவேலு, இனிமேல் போகலாந்தானே?

வடி. ஓம் கதிர்காமு, எனக்கொரு சுணக்கமுமில்லை. ஆனால் இப்ப எங்கை தங்கல்?

கதிர். ஏன் கேக்கிறாய்?

வடி. அதல்ல, இப்ப அம்மான் வந்திட்டு, தங்கடை வீட்டை எல்லா வசதியுஞ் செய்திருக்கு, அங்கை வரும்படி சொல்லிட்டுப் போறார். வரச்சொல்லிக் கேட்டவர்; நான் போகயில்லை. பேந்து வாறன் எண்டு சொல்லியிருக்கு.

கதிர். நீ ஒரு இடமுந் தங்கத் தேவையில்லை. உனக்கெண்டு ஒரு வீடு எடுத்து எல்லாவசதியுஞ் செய்து வைச்சிருக்கிறன். அங்கைதான் இருக்கிறது. ஏன் மற்றவையின்ரை வீட்டை தங்குவான்?

## களம் 3

### இடம்: கொழும்பு வடிவேலுவீடு.

வடிவேலுவும் அவன் நண்பன் கதிர்காமுவும் வடிவேலு வீட்டில் அமர்ந்து பேசிக்கொண்டிருக்கின்றனர்.

கதிர். அப்ப, இங்கிலாந்திலை இருக்கிற வெள்ளைக்காறர் இஞ்சைவந்து இருக்கிற வெள்ளைக்காறரிலும் பாக்கச் சிம்பிளாய் இருக்கினமெண்டு சொல்றியே?

வடி. வேறை என்ன? இப்ப சிங்கப்பூரிலை உத்தியோகமாய் இருக்கிற யாள்ப்பாணத்தாருக்கும் யாள்ப்பாணத்திலை இருக்கிறவைக்கும் வித்தியாசமில்லையே? அதுபோலைதான்.

கதிர். அப்ப, உங்கினை வந்துதிரியிற ஆக்களைப் பாத்துத்தான் எங்கடை ஆக்கள் உங்கினை கொளும்புவளிய இமிற்றேசன் போட்டுத் திரியிறது; உண்மையான இங்கிலீசுகாறரை யல்ல?

வடி. இல்லை, இல்லை.

அப்போது கார்த்திகேயபிள்ளை வருகின்றார். இருவரும் எழும்பிநிற்க அவர் ஓர் ஆசனத்தில் அமருகின்றார்.

கார். என் தம்பி நிக்கிறியள்? இருங்கோவன். (கதிர்காமு அமருகின்றான். வடிவேலு நிற்கின்றான். வீட்டை அங்குமிங்கும் அண்ணாந்து பார்த்துக்கொண்டு) வீடு

நல்ல பிளான்தான். ஆனால் இந்தச் சிவரைத்தான் போலிவேலையாக்கிப் போட்டாங்கள். (வடிவேலுவைப் பார்த்து) என்ன வாடை தம்பி?

வடி. 250 ரூபாய்.

கார். சூ, இதுக்கு 250 ரூபாயே? கேட்டியே கதிராமு, உனக்குத்தானே தெரியும் என்ரை வீடு.

கதிர். ஓம், ஓம், எனக்கு நல்லாய்த் தெரியும்.

கார். அது இதிற்பாக்க எவ்வளவு பெரிசு. அதின்ரை போட்டிக்கோவின்ரை அளவென்ன? நல்ல பெரிய காடின்; நான் வேண்டக்கு முந்தி ஒரு வெள்ளக்காறனுக்கு 450 ரூபாவுக்கெல்லே குடுத்திருந்தவங்கள். என்ரை மோளுக்கு அதிலே ஒரு கவர்ச்சி பிடிச்சிட்டுது. அதுதான் வேண்டினனான். இருந்தாலும், இப்போதைக்குத் தம்பிக்கு இது போதும். இன்னம் எத்தினை நாளைக்கு? எண்டாலும், ஆரும் பெரிய உத்தியோகத்தன் வருவான் போவான். இன்னங் கொஞ்சம் பாசனபிளாய் (fashionable) வைச்சிருக்க வேணும். அங்கை வீட்டை பிளவர் பொற்சு (flower pots) எல்லாம் வைக்க இடமில்லாமல் கிடக்கு. அவன் தாமனெட்டை நான் அனுப்பி விடிறன்.

கதிர். நானும் உவரெட்டை உப்பிடித்தான் சொன்னனான், பாருங்கோ.

கார். உங்கை சாப்பாட்டு வசதியெல்லாம் எப்பிடியோ, தம்பி?

வடி. அங்கினை ஒரு மலையாளத்தான் இருந்து சமைக்கிறான்.

கதிர். எப்பிடியெண்டாலும் பாருங்கோ, ஒரு பெண்ணாய்ப் பிறந்தவள் இருந்து வீட்டைப் பாத்து மேய்க்கிறது

போலே வருமே. பெண்ணில்லாட்டால் அந்த வீடு பேய்வீடுதான்.

கார். சரிதான் தம்பி, (வடிவேலுவை நோக்கி) சொன்னாப் போலே தம்பி, கொம்மா ஏதும் தவால் கிவால் இந்த நாளையிலே எழுதினவவே? எனக்கொண்டு வந்துது.

வடி. உங்கினை எனக்கும் ஒண்டு வந்துதுதான்.

கார். கேட்டியே தம்பி கதிராமு. ஏன் இப்படி எல்லாரும் திக்காலுக்குத் திக்காலாய் இருந்துகொண்டு கஷ்டப்பட்டுக்கொண்டு திரிவான்? நம்ம தங்கச்சிக் காறி இருக்கிறாவே, தம்பியின்ரை தாய்; எனக்கு முறைக்கு முறை தவால் எழுதிக்கொண்டிருக்குது. இப்பிடி, தன்ரை கண் மூடக்கு முந்தி தம்பியின்ரை சீரைச் சிறப்பைப் பாக்க வேணுமாம். அதோடை எனக்கும் நல்லாய் மதியந்திருப்பி விட்டுது. அப்ப கதிராமு, அந்த முற்றாகின விஷயத்தை ஏன் நெடுக இழுத்துக்கொண்டு கிடப்பான்? அதைக் கெதியாய் ஒழுங்குபண்ணிப் போடுவம். நானும் ஒரு பேரப்பிள்ளையைக் கண்டிட்டுச் சாகலாம்.

கதிர். நீங்கள் சொல்றது சரிதான் பாருங்கோ. இனிமல் உவரை நெடுக இப்பிடி விடக்குடாது. அதைக் கிட்டடியிலே முடிச்சுப்போட வேணும்.

கார் அதுசரி, நம்ம தங்கச்சியும் கெதியாய் இஞ்சை கொழும்புக்கு வாறாவாம். வந்தாப்போலே கலந்து பேசி, அவன் தாடிச் சாத்திரியைக் கூப்பிட்டு மற்ற மாதம் நல்ல நாளாய்ப் பாத்து ஒருநாளை வைப்பம். அது கிடக்கட்டும், வீட்டிலே பிள்ளை தனிய. நான் போட்டுவாறன். எல்லாத்துக்கும் (வடிவேலுவைப் பார்த்து) அப்ப, தம்பி, புதன்கிளமை ஒருக்கா வீட்டை

டின்னருக்கு வாவன். பிள்ளையும் சொன்னுள் அண்ணைக்குத்தான் தனக்கு லீவெண்டு.

வடி. அதுக்கென்ன, வாறன் அம்மான்.

கார். அப்ப நான் வாறன். (போகின்ருர்.)

கதிர். (கார்த்திகேயபிள்ளை தடுதடுத்து நடப்பதைக் கண்ணுற்று அவர்கையில் பிடித்து) விளுந்து கிளுந்திடாதையுங்கோ. கவனம். மெல்ல.

கார். ஓ ஓ. (வடிவேலுவை நோக்கி) அப்ப தம்பி, மறந்துகிறந்திடாதை. எளுமணிக்கு உன்னை அங்கை காத்திருப்பம்.

வடி. ஓம் அம்மான்.

## களம் 4

### இடம்: கொழும்பு, கார்த்திகேயபிள்ளை வீடு.

கமலவேணி கிமோனே உடுப்போடு ஒரு நாற்காலியிற் சாய்ந்துகொண்டு பத்திரிகை வாசித்துக்கொண்டு இருக்கிருள். தாமு அறையிலுள்ள கதிரைகளைத் துடைத்துக்கொண்டிருக்கின்ருன்.

தாமு. (வேலையை இடையில் நிறுத்திவிட்டுக் கமலவேணிக்குக் கிட்டப்போய்) மோனை, வாற சனிக்கிளமை ஓடிற றேசிலை (race) எந்தக் குதிரை வெற்றியெடுக்குமெண்டு உந்தப் பேப்பரிலை போட்டிருக்கிருங்கள். அதை ஒருக்காப் பாத்துச் சொல்லு, மோனை. போன சனிக்கிளமை றேசிலை, ஒலோன் போட்டு ஐஞ்சுறுவா போச்சு. இந்த முறை அதை எடுத்துப்போட வேணும்.

கமல. குஞ்சிலாட்டா எண்ட குதிரைதான் வெற்றியெடுக்குமாம்.

தாமு. மெய்தானே மோனை? (மடியிலிருந்து ஒரு கடுதாசித் துண்டை எடுத்துக்கொடுத்து) இந்தத் துண்டிலே எழுதிக்கிடக்கிற குதிரையள் வெல்லாதாமோ மோனை? இதையொருக்காப் பாத்துச் சொல்லு. (கமலவேணி வாங்கிப் பார்க்கிறாள்.) இது எனக்கு ஒரு சொக்கி வீட்டு வேலைக்காறன் தந்தது.

கமல, என்னது? ஆர் தந்ததெண்டனி?

தாமு. ஒரு சொக்கிவீட்டு வேலைக்காறன்.

கமல. ஓகோ, ஜொக்கி (Jockey) வீட்டு வேலைக்காறனோ?

தாமு. ஆ, அதுதான் மோனை; அதுதான்.

கமல. அப்ப நீ றேசு ஓடிற இடத்துக்குப் போற இல்லையோ?

தாமு. சீச்சீ, நான் உந்தச் சனிபிடிச்ச இடத்தை எட்டியும் பாக்கிறதில்லை.

கமல. சாய், ஒளியாமல் சொல்லு தாமு; நான் ஒருத்தருக்கும் சொல்ல இல்லை.

தாமு. உண்மையைச் சொல்றன் மோனை, ஒருத்தருக்கும் சொல்லாதை. போன சனிக்கிளமை அடுத்த வீட்டுப் போய் (boy) அப்புகாமி இருக்கிறானே, அவனோடை சாடையாய்ப் போனன். ஆ, அதை ஏன் பேசுவான். அங்கை நிண்ட காறுகளின்ரை தொகையென்ன, அதுகளின்ரை பருமையென்ன? டிக்கற் (ticket) எடுத்துக்கொண்டு ஒருவிதமாய் நெரிஞ்சுகொண்டு உள்ளுக்குப் போனன். அப்பாடி, என்னென்னவிதமான ஆக்கள்? என்னென்ன விதமான பொண்டுகள்? அவையின்ரை உடையென்ன, நடையென்ன, பூச்சென்ன? உண்ணாணை மோனை, எங்கடை வேல் திருவிளாகூடத் தோத்துப்போம். அவ்வளவு தொகை சனம். நீ றேசுக்குப் போற இல்லையே?

கமல. ஐயா வாருர், பேசாதை.

அப்போது கார்த்திகேயபிள்ளை வருகின்ருர்.

கார். எட தாமு, உங்கை என்னெடா செய்யிருய்? உன்னெட்டைச் சொன்னதென்ன? நீ செய்யிறவேலை என்ன ?

தாமு. இல்லை ஐயா, துடைச்சு முடியுது. (ஓடிப்போய்ப் பின்னருங் கதிரைகளைத் துடைக்கின்ருன்.)

கார். (மணிக்கூட்டைப் பார்த்து) 6 மணியாய்ப் போச்சு. என் பிள்ளை, போய் உடன். ஏழுமணிக்கு வந்திடுவான் கொத்தான்.

கமல. போறன் ஐயா.

கார். கனநேரம் எடுத்துப்போடாதை உடுக்க. அவன் சீமையிலை இருந்தவன். சரியாய் ஏழுமணிக்கு வந்திடுவான். (தாமுவைப் பார்த்து) எடே தாமு, எல்லாத்தையும் நல்ல றயிற்ருய்க் கெதியாய் வைச்சிட்டு, டின்னறை எடுத்து ஆயத்தம்பண்ணக் கோக்கியெட்டைச் சொல்லிவிடு.

தாமு. ஓமையா.

கார். அந்தச் சாப்பாட்டு மேசைக்குப் புதுச்சீலை விரிச்சுப் போடு.

தாமு. ஓமையா.

கார். போன சனிக்கிளமையைப்போலை அந்தக் கோப்பையளைப் போட்டுக்கீட்டு உடைச்சுப்போடு, என்ன ?

தாமு ஓமையா?

கார். எட மோட்டுப் பயலே. (மகளைப் பார்த்து) சொன்னுப்போலை உனக்குச் சொல்ல மறந்துபோனன், பிள்ளை; காலமை இஞ்சை ஒரு சங்கதி நடந்தது.

கமல என்னேயா அது ?

கார். உந்த மயிலன்ரை மோள் வள்ளி இருக்கிறுளே.

கமல. அதாரது ஐயா ?

கார். அவள்தான் என்ரை தம்பிக்காறன் பெண்டாட்டி.

கமல. ஆ, தெரியுது, தெரியுது. அவவுக்கு என்ன ?

கார். அவளும் மோளும் காலமை, நீ ஆசுபத்திரிக்குப் போனுப்போலே இஞ்சை வந்தினம்.

கமல. ஆர் இராசம்மாவோ ? ஏனும் வந்தவை ?

கார். அந்தப் பெட்டைக்கு ஏதோ நாயோ கீயோ கடிச்சுப் போட்டுதாம். அதுதான் விசர்நாய் ஆசுப்பத்திரி யிலை மருந்துசெய்விக்க வந்ததாம். (தாமுவைப் பார்த்து) என்னடா வாய் பாக்கிறுய்.

தாமு. ஓமையா.

கார். உன்ரை வேலையைப் பாரடா. நாய்ப் பயலே.

கமல, பிறகு ?

கார். பின்னை, இஞ்சை நிண்டுகொண்டு அங்கை போய்ப் போய் ஊசி ஏத்துவிச்சுக்கொண்டு வாலாமோ எண்டு கேட்டினம். நான் ஒருவிதமாய் ஆசுப்பத் திரிக்கே கலைச்சுவிட்டிட்டன். உந்த எளியபடையை இஞ்சை வீட்டிலை வைச்சுக்கொண்டு என்ன செய் யிறது ?

கமல. அதுதான் நல்லது. இது என்ன மடமெண்டு நினைச்சுக்கொண்டினமாமே? சீலை கீலை சிராய் உடுக்கத் தெரியாது. மேசையிலை இருந்து சாப்பிடத் தெரி யாது. ஆரும் வந்து உதுகளைக் கண்டால் என்ன நினைப்பினம் எங்களைப்பற்றி.

கார். (மணிக்கூட்டைப் பார்த்துவிட்டு) சரி, அதுதான் கஞ்சல்க் கதை. நேரம்போகுது, நீ போய் உடு.

கமலவேணியும் கார்த்திகேயபிள்ளையும் உள்ளுக்குப் போகின்றனர். தாமு அறையைக் கூட்டிக்கொண்டு நிற்கிறான். அப்போது வடிவேலு வருகின்றான்.

தாமு. (அவனைக் கண்டவுடன்) தம்பி, தம்பி, வந்திட்டியே? ஐயாவும் பிள்ளையும் உன்னை இவ்வளவு நேரமும் காத்துக்கொண்டிருந்திட்டு இப்பான் போயிருக்கினம்.

வடி. எங்கை?

தாமு. உங்கை உள்ளுக்கு, உடுக்க; (உரமாய்) ஐயா, ஐயா.

உள்ளுக்கு என்னடாது?

தாமு. தம்பி வந்திட்டுது.

கார். (உடுத்து அரைவாசியில் விரைந்துவந்து) இரு, தம்பி, இரு. கெதியாய் வந்திடுறம். (வடிவேலு ஒரு கதிரையில் அமருகின்றான்.) என்னடா தம்பி எங்கிருப்? ஐயா எண்டு சொல்லவேணும், தெரியுதே? எடே, அந்தத் தலைப்பாக் கட்டிவைச்சிட்டியே?

தாமு. ஓமையா. (கார்த்திகேயபிள்ளை போகின்றார்.) உவர் கிடந்தார் தம்பி, உவருக்கு இப்ப கொஞ்சம் தலை பழுதாப் போச்சு. சும்மா யாள்ப்பாணத்திலை சிவசிவா எண்டு கிடந்த என்னைப் பிடிச்சுக்கொண்ணந்து இந்த வெய்யில் வேர்வையுக்கைகூடச் சட்டை தொப்பி எல்லாம் போட்டுக்கொண்டு நிக்கச் சொல்லுகினம். உவையோடை அண்டலிக்கிறது பெரிய கயிட்டமாய்க் கிடக்குத் தம்பி.

வடி. என் தாமு?

தாமு. பின்னை என்ன தம்பி, எல்லாம் வெள்ளைக்காற மாதிரியாய்க் கிடக்கு. நாங்கள் அங்கை ஊர்மாதிரியாய் இருந்த எங்களுக்கு இதெல்லாம் எப்பிடிப் பிடிக்கும்? ஐயா எண்டால் முன்னையைப்போலை இல்லை.

துரைக்கு விளையாடிருர். அம்மா ஒரு துரைச்சாணி. (சமுக்காளத்தை நிலத்தில் புறம்மாறிப் போடுகின்ருன்.)

வடி. என்ன தாமு, காப்பற்றைப் (carpet) புறம்மாறிப் போட்டிட்டாய்.

தாமு. எடட, மெய்தான் தம்பி. அதென்ன, ஊரிலை சாக்குப் போட்டுப் பளகின எங்களுக்கு உதுகளையெல்லாம் போடிறதெண்டால் என்னெண்டு சரிவரும்? (சரியாக எடுத்துப் போட்டுவிட்டுத் தலையைச் சொறிந்து கொண்டு) தம்பி, உன்னைக்கண்டு கனநாளாய்ப் போச்சு. உன்ரை சீரைச் சிறப்பைப் பாக்க உன்ரை அப்பு, முருகேசு உடையார் இல்லாமல் போச்சு. என்ன செய்யிறது. அவருக்கு உன்ரை சீரைச் சிறப்பைப் பாக்கக் குடுத்துவைக்கயில்லை. அதிருந்தால் நான் இஞ்சையும் வருவனே? இப்பிடியெல்லாம் இவையோடை இளுபட என்ரை தலைவிதியும் அப்பிடியாய்ப் போச்சு. அதிருக்க, நீ நான் தூக்கி வளத்த பிள்ளைதானே. (அங்கும் இங்கும் பார்த்து) மனதோடை இருக்கட்டும் தம்பி, நான் கொள்ளுப்பிட்டிக்குப் போய் இரண்டு நாளாச்சு. கையிலை ஏதும் சில்லறை இருக்கே?

வடி. சரி, விளங்குது தாமு. நீ இன்னும் உதை விட இல்லையே?

தாமு. இந்தச் சூட்டுக்குக் கொழும்பிலை அதில்லாமல் என்னெண்டு சரிக்கட்டுறது தம்பி?

வடி. பின்னை இந்தா. (காசு கொடுக்கின்ருன்.) இது போதுமே?

தாமு. மெத்தத் திருத்தி தம்பி. நாலு போத்திலுக்குக் காணும். அவ்வளவுதான் நிண்டுபிடிப்பன். வயதும் போட்டுது. அதுக்குமேலை இனி ஏலாது.

வடி. வேறை என்ன புதினம்? ஊரிலை எல்லாரும் எப்பிடி? அங்கை நீ போறயில்லையே? உனக்கும் கொழுப்பு பிடிச்சிட்டிதுபோலை.

தாமு. அப்பிடி ஒண்டும் இல்லைத்தம்பி. காலமை இஞ்சை ஒரு சங்கதி நடந்தது.

வடி. அதென்ன தாமு?

தாமு. உங்கடை மாமி வள்ளியம்மையாரும், மோள் இராசம்மாவும் ஊரிலைஇருந்து வந்திருக்கினம். உனக்குத் தெரியாதே?

வடி. (அவசரப்பட்டு) இல்லை, இல்லை, எனக்குத் தெரியாது தாமு. என்ன, உங்கை உள்ளுக்கு நிக்கினமே?

தாமு. சிச்சீ, அவை இஞ்சை என்னெண்டு நிக்கிறது? அந்தப் பெட்டைக்கு விசர்நாய் கடிச்சுப்போட்டுதெண்டு, விசர்நாய் ஆசுப்பத்திரியிலை மருந்துசெய்ய வந்தவையாம். இஞ்சை நிண்டுகொண்டு மருந்து செய்விக்கலாமெண்டு பாத்தினம். ஐயா நிக்கவிடாமல் திரத்தி விட்டிட்டார்.

வடி. (அவசரமாய்) பிறகு, பிறகு? அவை எங்கை இப்ப?

தாமு. எங்கை, ஆசுப்பத்திரியிலை எண்டுதான் நினைக்கிறன். எண்டாலும், இந்த மனிசன் செய்தது சரியில்லை. தன்ரை மோளெண்டாலென்ன தன்ரை தம்பியின்ரை மோளெண்டாலென்ன; உப்பிடியுஞ் செய்யிறதே?

வடிவேலு ஆழ்ந்த யோசனையில் இருக்கின்றான்; அப்போது கார்த்திகேயபிள்ளையும் மகள் கமலவேணியும் வருகின்றனர். வடிவேலு எழுந்துநிற்கின்றான்.

கார். இரு தம்பி, இரு. (மூவரும் கதிரைகளில் அமருகின்றனர்.) எடே தாமு.

தாமு. எனையா?

கார். அந்தக் கொக்றெயிலைக் (cocktail) கொண்டாடா. (வடிவேலுவைப் பார்த்து) இண்டு பின்னேரம் முளுக்கப் பிள்ளைக்கு உது மிக்ச் (mix) பண்ணினதுதான் வேலை. உந்த வேலையிலை அவள் ஒரு கெட்டிக்காறி.

வடி. ஆங், அப்பிடியோ?

கார். அது மாத்திரமே? நீ டின்னருக்கு வருவாயெண்டு என்னென்ன விதமான புடிங் எல்லாம் தானாகநிண்டு சரிக்கட்டியிருக்கிறாள். (கமலவேணி தலையைக் குனிகிறாள்.) இனிமல் கேக்குகள் செய்யிறதிலையெண்டால் பெரிய ஒரு வீரி.

வடி. இதுகள் செய்யப் பளகியிருக்கிறது நல்லதுதானே.

கார். இன்னும் பிள்ளை என்னென்ன வேலையெல்லாம் பளகியிருக்குது. (தலையைத் தடவுகின்றார். பரபரப்போடு) எட தாமு, எட தாமு.

தாமு. ஏனையா?

கார். அந்தத் தலைப்பாவைக் கொண்டாடா.

தாமு. ஓமையா. நான் தீர மறந்தெல்லோ போனன். (உள்ளுக்குப் போகின்றான்.)

கார். இப்பிடியான பளக்கம் பொம்பிளைப் பிள்ளையளுக்கு அவசரம் வேணும். இதுக்காக எவ்வளவு பொருளைச் சிலவளிச்சுப் படிப்பிச்சனான் தெரியுமே? இங்கிலீசு மாதிரிச் சமயல் நீ வந்தா வேணுமெண்டு, பின்னேரத்திலை இதுக்கெண்டு ஒரு குக்கிங் ஸ்கூலிலை (cooking school) எல்லே விட்டுப் படிப்பிச்சனான்.

வடி. அது நல்லதுதான் பாருங்கோ.

கார். தாமு, கெதியாய் வாடா. நேரம்போகுது. (வடிவேலுவை நோக்கி) இவன் தாமனுலையல்லோ தம்பி,

பெரிய தொந்தறவாய்க் கிடக்கு. ஊருக்குப் போடா என்டாலும் போய்த் துலையிருனில்லை. பிலாக்காய்ப் பால் மாதிரி ஒட்டிக்கொண்டே கிடக்கிருன். (மணிக்கூட்டைப் பார்க்கிருர். அட்போது தாமு தலைப்பாகை அணிந்துகோண்டு வருகின்ருன்.) எங்கை யடா தலைப்பா ?

தாமு. (தனது தலைப்பாகையைக் காட்டி) இஞ்சை இருக் கையா.

கார். மோட்டுப் பயலே, உன்ரை தலைப்பாவை ஆர் இஞ்சை கேட்டது ? என்ரை தலைப்பாவையெல்லோ கொண் டரச் சொன்னனுன். கெதியாய் வாடா. block head.

தாமு. ஓமையா. (உள்ளுக்குப் போகின்ருன். பின்பு திறேயில் தலைப்பாகை ஒன்றை வைத்து இருகை யாலும் ஏந்திக் கோண்டுபோய்க் கார்த்திகேயபிள்ளை முன்பு நிற்கின்ருன் )

கார். (தலைப்பாகையை எடுத்துப் போட்டுக்கோண்டு) தமி ளனுய்ப் பிறந்தவன் தலைப்பா அணியவேண்டுந் தம்பி. தலைப்பா இல்லாவிட்டால் அவன் தமிளனல்ல. எங் கடை பெரியாக்கள் எல்லாம் பெரிசாய் வந்தது என்னத்தாலை ? தலைப்பாவாலைதானே. அப்ப தம்பி, இனிமல் (மணிக்கூட்டைப் பார்ச்கிருர்.) நேரமாகுது. ஏன் மினைக்கெடுவான் ?

(எழும்புகிருர்கள்)

# உறுப்பு III

## களம் 1

### இடம்: கொழும்பு, ஆசுப்பத்திரி

இராசம்மா கட்டிலிற் படுத்திருக்கின்றாள். பக்கத்தில் அவள் தாய் வள்ளியம்மை இருந்து அவளோடு உரையாடிக் கொண்டிருக்கிறாள்.

**வள்ளி.** (அவள் கையிலே தொட்டுப்பார்த்து) இப்ப அவ்வளவு காச்சல் இல்லை. இனிமல் எல்லாம் சுகமாய்ப் போகும் எண்டு இடாக்குத்தர் சொல்லிப்போட்டுப் போறார். தலை இடிக்குதே மோனை?

**இரா.** இல்லையெணை.

**வள்ளி.** அப்ப அது சும்மா காச்சலாக்கும். விசர்நாய் கடிச்சதாலை வந்ததல்ல. மெய்யே மோனை, மங்கையர்க்கரசியும் கொழும்பிலைதானே இருக்கிறவள்?

**இரா.** ஓமெணை.

**வள்ளி.** இஞ்சை இருந்து அவள் இருக்கிறது தூரமாக்கும். அறிவிச்சா அந்தப் பெடிச்சி அடிக்கடி வந்து பாக்கும்; ஒரு துணையாயும் இருக்கும்.

**இரா.** அவ றெயினிங் கொலிச்சிலை. இஞ்சையிருந்து தூரமோ என்னமோ தெரியாது. அவவின்ரை தாயெட்டைச் சொன்னனான், கொழும்புக்குப் போற தெண்டு. அறிஞ்சா ஒருவேளை இஞ்சினை வருவா.

அப்போது வடிவேலுவும் கதிர்காமுவும் வருகின்றனர்.

**வள்ளி.** (இருவரையுங் கண்டுவிட்டு) வாருங்கோ தம்பி, வாருங்கோ.

**வடி.** இப்ப எப்பிடி இருக்கு?

வள்ளி. ஒண்டுமில்லை. கொஞ்சங் காச்சல்தான் காயுது. மற்றது நேரத்துக்கு நேரம் ஊசி ஏத்துகினம்.

கதிர். காச்சலைப்பற்றி இடாக்குத்தர் என்ன சொன்னார்?

வள்ளி. அவங்கள் ஏதோ நாங்கள் கேட்டால் சொல்லிருங்களே. சும்மா வாறதும் பாக்கிறதும் அங்கை தலை மாட்டிலை வைச்சிருக்கிற கடுதாசியிலை என்னவோ எளுதிறதும் போறதுந்தான். பின்னை ஏதும் நான் கேட்டால் நாய்போலை வள்ளெண்டு விளுகிருங்கள். (பெருமூச்சு விட்டு) ஏளையளுக்கு வருத்தம் வந்தால் உப்பிடித்தான் பாடுபடவேணும். இந்தப் பிள்ளைக்கெண்டுதான் இப்பிடியெல்லாம் வந்து கிடக்கு. ஏதும் செய்யுமே மோனை?

கதிர். அதொண்டுஞ் செய்யாது. நீங்கள் பயப்பிடாதேயுங்கோ.

வள்ளி. என்னவோ விசர்நாய் கடிச்சால் காச்சல் வந்து சன்னியாக்கி விசர்நாய்போலை கத்திக்கொண்டு எளும்பியோடி, ஆக்களுக்கும் கடிச்சு, பேந்து சாகிறதாம். என்னவோ, நாங்கள் ஒண்டுமில்லாத ஏளையள். கடவுள் என்ன நினைச்சிருக்கிறாரோ தெரிய இல்லை. (பெருமூச்சு விட்டு) அப்பூ, செல்லச்சன்னிதியானே, நான் ஒண்டும் அறியேன. ஏதோ நீதான் துணை! என்ரை பிள்ளை சுகப்பட்டு எளும்பினல் நான் உனக்குப் பால்ச் சொம்பும் எடுத்து, உன்ரை கோயிலிலை வந்து அவிச்சுங் குடுப்பன்.

வடி. நீங்கள் ஒண்டுக்கும் பயப்பிடாதையுங்கோ, மாமி. உப்பிடி எத்தினை பேருக்குச் சுகம்வந்திருக்கு. அதெல்லாம் பார்த்துக்கொள்ளலாம்.

வள்ளி. அப்பொருக்கா அந்த இடாக்குத்தரெட்டைக் கவன மாய்ப் பாக்கச் சொல்லிவிடு மோனை. உனக்குத் தறு மங் கிடைக்கும்.

வடி. அதெல்லாம் நான் பாத்துக்கொள்ளிறன். அது கிடக்க, நீங்கள் ஏன் எனக்கு அறிவியாமல் இஞ்சை நேரை வந்தனீங்கள்?

வள்ளி. நான் என்ன மோனை செய்பிறது? அவசரத்திலை வெளிக்கிட்டது. ஒருதருக்கும் எழுதமுடியஇல்லை. பிள்ளையின்ரை பெரியதேப்பன் கண்டாக்கர் இருக் கிருரே, அவற்றை விலாசந்தான் ஆப்பிட்டுது. பின்னை அதைத்தான் நம்பி வெளிக்கிட்டம். அங்கை போனுல் அதை ஏன் பேசுவான்?

வடி. தெரியும், தெரியும். நீங்கள் சொல்லவேண்டாம்.

வள்ளி. உனக்காரோ சொன்னதே மோனை?

வடி. அவன் அம்மானவையின்ரை வேலைகாறன் தாமு சொன்ஞன். அவன் சொல்லத்தான் எனக்குச் சங்கதி தெரியும்.

வள்ளி. மெய்தானே மோனை. காசில்லாத வறியதுகளுக்கு வாறதெல்லாம் இப்பிடித்தான். எங்களுக்கு இங் கிலீசு தெரியாதாம். வெள்ளைக்காறர்போலை இல் லையாம். சரி, கிடக்கட்டும். என்ரை பிள்ளை இங் கிலீசு கனக்கப் படிக்க இல்லைத்தான். ஆனல் அவள் படிச்ச தமிழ்ப் படிப்பின்ரை கால்த் தூசுக்கும் பெருது உவையின்ரை இங்கிலீசுத் தூளெல்லாம். அதுக்கென்ன, பிள்ளையின்ரை தேப்பன் இருந்தா ரில்லை. அப்ப தெரியும் சங்கதி. உவையின்ரை காசெல்லாம் ஆற்றையெண்டு நினைக்கிருய். இவர்

உளைச்சுளைச்சு நம்பிக்கைக்குக் குடுக்கக் குடுக்க வேண்டிவைச்சிட்டு பேந்து அவர் செத்தாப்போலை விளையாடிவிட்டினம். உதுக்கெல்லாம் உத்தரிப்பினம், ஓ.

வடி. ஏன் அவையளை அப்பிடிப் பேசிறியள்?

வள்ளி. சொன்னப்போலை, குறை நினைச்சுக்கொள்ளாதை தம்பி, நான் மறந்துபோய் என்ரை மனத்துக்கத்திலை இப்பிடிப் பேசிப்போட்டன்.

வடி. அதைப்பற்றி ஒரு குறையுமில்லை. அப்ப வரப் போறம்.

வள்ளி. சரி, வாருங்கோ.

## களம் 2

### இடம்: கொழும்பு, கார்த்திகேயபிள்ளை வீடு.

கார்த்திகேயபிள்ளையும் மகள் கமலவேணியும் ஒரு அறையில் இருக்கின்றனர்.

கார். பிள்ளை, மாமி வந்தவவோ?

கமல. இல்லை, ஐயா.

கார். வரச்சொல்லிப்போட்டு வந்தனான். ஏன் இன்னங் காணயில்லை? ஒருவேளை வாறதுக்குக் கொத்தான் காறை எங்கையெண்டாலும் கொண்டுபோட்டானோ? சாய், வராமல் விடாள். என்ன சங்கதி?

கமல. அப்ப பின்னை வருவாவாக்கம்.

கார். (மணிக்கூட்டைப் பார்த்துவிட்டு) சாய், ஏளு மணியாப் போச்சு. இன்னங் காணஇல்லை. அவன் சாத்திரியையும் வரச்சொல்லிப்போட்டன்.

கமல. ஏன் ஐயா ?

கார். பொருத்தம் பாக்க.

கமல. இன்னும் பளம் மாதிரியே ?

அப்போது சின்னத்தங்கம் வருகின்றாள்.

கார். (அவளைக் கண்டவுடன்) ஆ, தங்கச்சி வந்திட்டியே?

சின்ன. ஓமண்ணை.

கார். இவன் சாத்திரியை இன்னம் காணஇல்லை? எட தாமு, அவன் தாடிச்சாத்திரி உங்கினை வாறானோ பாரடா.

தாமு. அவர் எப்பவோ வந்து தோட்டத்துக்கை இருக்கிறாரையா. வரச்சொல்லிவிடட்டே ?

கார். ஓ, வரச்சொல்லிவிடு. டின்னருக்கு நேரமாய்ப் போச்சு ; கெதியாய் முடிச்சுப்போடவேணும். (சின்னத்தங்கத்தைப் பார்த்து) தம்பியின்ரை சாதகங் கொண்டுவந்தனியே தங்கச்சி ?

சின்ன. ஓமண்ணை, இஞ்சை கிடக்கு. (சாதகத்தை எடுத்துக் கொடுக்கின்றாள்.)

தாடிச்சாத்திரி வருகின்றான்.

கார். (எழும்பி) வாருங்கோ சாத்திரியார், வாருங்கோ. (தாமுவை நோக்கி) எட தாமு, கொஞ்ச வெத்திலை பாக்குக் கொண்டோடியாடா. (அவன் கொண்டு வந்து கொடுக்கின்றான். வெற்றிலைக்குள் காசு வைத்து எழும்பிநின்று கொடுக்கின்றார்.) இந்தத் தெட்சணையை வைத்துக்கொள்ளுங்கோ, சாத்திரியார். பஞ்சாங்கம் கொண்டுவந்தனீங்களே ? எங்கடை பஞ்சாங்கத்தையெல்லோ இவன் தாமன் கிளிச்சுப்போட்டான்.

சாத். ஓம்மையா, சொன்ணன்தனுன். அப்ப அந்தச் சாதகங் களை ஒருக்கா.........

கார். (இரண்டு சாதகங்களையும் கொடுத்து) இதிலை இரண்டுபேருடைய குறிப்பும் கிடக்கு.

சாத். (அவைகளை வாங்கிப் படித்துவிட்டு பஞ்சாங்கத்தை யும் தட்டிப் பார்த்துக் கணக்குப் போட்டுவிட்டு) ஆண்சாதகத்துக்கு 27 வயதும் 4 மாதமும் 3 நாளும் நடக்குது. சரிதானே ஐயா?

கார். என்ன பிள்ளை?

சின்ன. ஓ, அப்பிடி இருக்கும்.

சாத். பெண் சாதககதுக்கு 26 வயதும் 11 மாதமும் 28 நாளும் நடக்குது. என்னையா?

கார். அவ்வளவு வந்திட்டுதே? (யோசித்துவிட்டு) ஓ இருக் கும்.

சாத். அப்பிடித்தான் சாதகம் சொல்லுகுது. (ஒரு தாளில் கணக்குப்போட்டுப் பார்த்துவிட்டு) இச் சாதகங் களுக்கு ஏனையா பொருத்தம் பாப்பான்?

கார். (திடுக்கிட்டு) ஏனப்படிச் சொல்றியள்?

சாத். இச்சாதகர் இருவரும் பெரும்பாலும் ஒரே கிரகநிலை யுடையவர்களாய் இருக்கின்றார்கள். அதனல் இவர்கள் மிக நெருங்கிய பந்துக்கள் எனத் தெரி கின்றது. என்ன மெய்தானே?

கார். ஓம், மச்சானும் மச்சாளுந்தான் பாருங்கோ.

சாத். அதே போதுமே. தாய்மாமன் பிள்ளையெண்டால் மனப்பொருத்தம் நிச்சயம் இருக்கும். அது இருந் தால் சாதகப்பொருத்தம் பாக்கத் தேவையில்லை. அதுதான் போனலும் கிரகப் பொருத்தமோ மிக நன்றுயிருக்கின்றது. நட்சத்திரப் பொருத்தம்,

கணப்பொருத்தம், மகேந்திரப் பொருத்தம், ஸ்திரீ தீர்க்கப்பொருத்தம், இராசிப்பொருத்தம், வசியப் பொருத்தம், தாலிப்பொருத்தம், அடடட, எல்லாப் பொருத்தமும் மிக நன்றாயிருக்கின்றது. இதுபோலே பொருத்தம் வாறது மிகமிக அருமை பாருங்கோ. இதையேன் வைச்சு இழுத்துக்கொண்டிருக்கிறியள். இவர்கள் ஒருவருக்கென்றே ஒருவர் முற்பிறப் பிலே நியமிக்கப்பட்டவர்போல் இருக்கு. ஐயா இதைக் கெதியாய் மற்றொன்றையுங் கவனியாமல் செய்துபோடுங்கோ.

கார். அப்ப வேறொண்டும் பாக்கத்தேவையில்லை எங்கிறியளோ?

சாத். நிச்சயம். வேறொண்டும் பாக்கத்தேவையில்லை. (நெஞ்சிலே தட்டி) தாடிச்சாத்திரி சொன்ன சொல்லு ஒருக் காலமும் பிழைபோகாது. நீங்கள்தான் மாறினாலும் இச்சாதகர் இருவரும் தாங்களே கலியாணம் முடித்துக் கொள்ளுவார். தெரிகின்றதா?

கார். மெய்தானோ சாத்திரியார்?

சாத். ஓ ஓ, சரி, ஏன் மினைக்கெடுவான்? வேறையும் ஒரு இடத்திலை பொருத்தம் பாக்கப் போகவேணும் பாருங்கோ; நான் போட்டுவாறன். நேரம்போச்சு. (எழும்புகின்றார்.)

கார். (எழும்பி) மெத்தச் சந்தோஷம். பின்னை, வரப் போறியளே? (அவன்கையில் காசுவைத்து) இதை வைச்சுக்கொள்ளுங்கோ சாத்திரியார்.

சாத். கிடக்கட்டும் பாருங்கோ, இதெல்லாம் என்னத்துக்கு?

கார். சாய் சாய், இப்படிப்பட்ட விஷயத்திலை மறுக்கப் படாது சாத்திரியார்.

சாத். (வாங்கிக் கோண்டு) சரி, அப்ப வாறன்.

கார். (கைகூப்பி) ஆ ஆ, அப்ப வாருங்கோ. (அவரை அனுப்பிவிட்டுத் திரும்பிவந்து ஓர் இருக்கையில் அமர்ந்துகொண்டு) அப்ப, என்ன தங்கச்சி, எல்லாம் சரிதானே ?

சின்ன. ஓமண்ணை.

கார். அப்ப, நாளை நிச்சயம்பண்ணி வாறமாதம் செய்து போடுவம்.

சின்ன. ஓ, பின்னை அப்பிடிச் செய்யுங்கோவன். ஆனால் ஒண்டு.

கார். என்னது ?

சின்ன. அந்த வள்ளியம்மையாரின்ரை பெட்டைக்குத் தம்பியை நெடுக ஒரு பேச்சுக்காலாய் இருந்தது. ஆனால், தம்பி இப்ப இருக்கிறமாதிரிக்கு அதெல்லாம் சரி வராது. அதுக்கு இஞ்சை தங்கச்சியைப்போலை இங்கிலீசுப் படிப்பும் இல்லை. இந்தச்சடங்குதான் எல்லாத்தாலும்சரி. எண்டாலும், இது நடக்கமுந்தி, அந்தப் பொடிச்சிக்கும் எங்கையெண்டாலும் ஒண்டை எடுத்துக் கட்டிவிட்டால் நல்லது, அண்ணை. அது இருந்து பெருமூச்சுவிடக்குடாது.

கார். (அதைக் கேளாததுபோல்) எட தாமு, சாப்பாட்டை எடுக்கச்சொல்லு.

## களம் 3

### இடம்: கொழும்பு, ஆசுப்பத்திரி.

இராசம்மா கட்டிலிற் படுத்திருக்கின்றாள். மங்கையர்க்கரசி வருகின்றாள்.

மங். இப்ப எப்பிடி இராசம்மா? இன்னுங் காச்சல் வாறதே ?

இரா. காச்சல் எப்பவோ விட்டுப்போச்சு. அது இதாலை வந்ததல்ல எண்டு டாக்குத்தர் சொன்னார்.

மங். அப்ப பின்னை, பயத்திலையாக்கும். கடிச்சது என்ன விசர்நாய்தானே அல்லது சும்மா நாயோ?

இரா. என்ன எண்டு சொல்லிக்கொள்ள முடியஇல்லை. விசர்நாய் போலான் இருக்கு. அங்கினை எங்களின்ரை பக்கத்திலை உள்ள நாயல்ல. நல்ல உயந்த பெரிய நாய். களுத்திலை ஒரு ஈர்வணிக்கயிறு கட்டியிருந்துது. அதை எங்கினையோ கட்டிவைச்சிருக்கிருக்கவேணும். அறுத்துக்கொண்டு வந்ததுபோலை. காலெல்லாம் செம்பாடாய்க் கிடந்துது.

மங். அப்ப அச்சுவேலியுப் பக்கத்து நாயாக்கும். அதுகள்தான் ஒவ்வொண்டு ஆடுகால்போலை. இப்ப கடிச்ச புண் ஆறிவிட்டிதே?

இரா. இன்னங் கொஞ்சங் கிடக்கு.

மங். கதையுக்கை கதை இராசம்மா, கேக்க மறந்து போனன். உங்கடை பெரியையாவும் கொக்கா கமலவேணியும் வந்து உன்னைப் பாக்கஇல்லையே? என் அவை வீட்டை நிண்டுகொண்டு மருந்து செய்விச்சிருக்கலாமே?

இரா. அவை வீட்டை நாங்கள் நாட்டுச் சனங்கள், என்னெண்டு நிக்கிறது?

மங். எனக்கெல்லாந் தெரியும். நீ சொல்லவேண்டாம். அவையள் முந்திய ஆக்கள் அல்ல. இப்ப வேறை மாதிரி.

இரா. ஏன், நீ அவையெட்டைப் போறஇல்லையே?

மங். ஒருநாள் கொளும்புக்கு வந்தாப்போலை போனன். அவை ஒருவிதமாய் வேண்டாவெறுப்பாய் இருந்தினம். நான் பின்னைப் பேந்து போறயில்லை. விருப்பமில்லாத இடத்துக்கேன் நாம் போவான்? உனக்கொரு சங்கதி தெரியாதே?

இரா. என்ன மங்கை.

மங். கெதியாய் உன்ரை கொக்கா கமலவேணிக்குச் சடங்கு நடக்கப்போகுதாம்.

இரா. எங்கை?

மங். உன்ரை கொத்தான் வடிவேலுவுக்குத்தான் எண்டு பெரிய புகாராய்க் கிடக்கு. வடிவேலர் உன்னை வந்து வருத்தம் பாக்கஇல்லையே?

இரா. அங்கினை இடையிலை வந்து அம்மாவோடை கதைச் சுப்போட்டுப் போறது.

மங். காசில்லாவிட்டால் எல்லாம் உப்பிடித்தான். கொய்யா இருந்தாலும் உப்பிடி நடக்குமே? ஆனால் உந்த ஆம் பிளையளும் காசுக்குத்தான் தூங்கிறுங்கள். நீயும் நெடுக மனக்கோட்டை கட்டிக்கொண்டு இருந்தது தான்.

இரா. அதுதான் நல்லது மங்கை. எனக்கென்ன அவரைப் போலை படிப்பிருக்கோ காசிருக்கோ?

## களம் 4

### இடம்: கொழும்பு, கார்த்திகேய பிள்ளை வீடு.

தாமு கதிரை முதலியவற்றை ஒழுங்குபண்ணிவிட்டுக் கூட்டும்பொழுது பாடுகின்றான்.

தாமு. நெற்றியிலிட்ட நீலவர்ணப்பொட்டு
நோய் அழிவானேன்
—என் சிங்கி, நோய் அழிவானேன்
வெய்யிலைக் கண்டு வீசி நடந்தேன்
வேர்வை யழித்ததடா
—என்சிங்கா, வேர்வையழித்ததடா.

அப்போது கார்த்திகேய பிள்ளை வருகின்றார். தாமு பாட்டை நிறுத்திவிட்டுக் கூட்டிக்கொண்டு நிற்கின்றான்.

கார். எட தாமு.

தாமு. ஏனையா.

கார். இண்டைக்குத் தம்பி இஞ்சை வந்ததோ?

தாமு. இன்னம் வரயில்லை ஐயா. அவரென்ன இப்ப வரப்போறாரே. ஆசுப்பத்திரியெல்லாம் போட்டுக் கீட்டு நேத்தையைப்போலை நல்லாய்ச் செண்டாப் போலைதான் வருவார்.

கார். ஏனடா ஆசுப்பத்திரிக்கு? பிள்ளையைப் போய்க் காணவோ? அவள் ஏப்பவோ வந்திட்டாளே.

தாமு. சீச்சீ, எங்கடை அம்மாவையல்ல ஐயா. அதோடை அம்மா வேலைசெய்யிற ஆசுப்பத்திரிக்கல்ல அவர் போறது. விசர்நாய் ஆசுப்பத்திரிக்கு.

கார். அங்கை ஏனடா அவர் போகப்போறார்? தெரி யாட்டா ஏனடா உந்த வீண்கதையை உனக்கு?

தாமு. ஐயா உங்களுக்குச் சங்கதி தெரியாதுபோலை. சின்னையா ஒவ்வொருநாளும் பின்னேரத்திலை அங்கை போறதாம். நிறையாகப் பூக்கிளெல்லாம் அனுப் பிறதாம். இராசம்மாப் பெட்டையோடை அவ வின்ரை கட்டிலுக்குப் பக்கத்திலை இருந்து கதைக் கிறதெண்டு கேள்வி.

கார். சும்மா இரடா. உனக்கேன் இந்த வீண்கதை எல் லாத்தையும். (எழும்பி யோசித்துக்கொண்டு அங்குமிங் கும் உலாவுகின்றார். அப்போது கதிர்காமு வருகின் றான்.) அதார் கதிராமுவோ? வா தம்பி, அதிலை இரு. (கதிர்காமு அமருகின்றான். தாமு போகின்றான்.)

கதிர், என்ன, இண்டைக்கொருடமும் போகஇல்லை ஐயா?

கார். இன்னம் போகஇல்லை.

கதிர். வடிவேலு இங்கினை வரஇல்லையே?

கார். இன்னம் வரஇல்லை.

கதிர். சாய், இஞ்சையும் காணஇல்லை. ஒருவேலை ஒண்டு. ஒருஇடமும் காணஇல்லை. இஞ்சை நிப்பாரெண்டு வந்தன். ஒருவேளை உங்கடை மகளோடை எங்கை யெண்டாலும் போட்டாரோ?

கார். இல்லைத்தம்பி, அவள் உங்கை வீட்டுக்குள்ளை நிக்கிருள்.

கதிர். சரி, கொஞ்சம் செண்டாப்போலைதான் ஆளைப் பிடிக்கலாம். மினைக்கெட்டென்ன, அப்ப பின்னைப் போவம். நீங்களும் எக்கையோ போகப்போறன் எங்கிறியள். (எழும்புகிருன்.)

கார். இரு தம்பி, இரு. எனக்கப்பிடி அவசரமில்லை. உன்னோடை ஒருகதை பேசவேணும். எப்பவோகூட இதைப்பற்றி உன்னோடை பேசவேணுமெண்டிருந்தனுன். ஒருநாளும் சந்திச்சு வரஇல்லை.

கதிர். என்னவோ?

கார். இந்த என்ரை தம்பியின்ரை பிள்ளை இருக்குதே, அந்த இராசம்மா. அந்தப் பிள்ளைக்கெல்லோ தம்பி, ஒரு சடங்கு எங்கையெண்டாலும் பாத்துச் செய்து வைக்கவேணும். உனக்குத் தெரியுந்தானே தம்பி, என்னவிதமாய் இவை எல்லாரையும் ஒரு கட்டுக் கூட்டாய் வைச்சுப் பாத்துக்கொண்டு இவ்வளவு காலமும் வந்தனுன் எண்டு. நான் பாராட்டால் இதுகளை ஆர் பாக்கிறது?

கதிர். மெய்தான் பாருங்கோ.

கார். அதுதான் என்ரை பிள்ளையின்ரை சடங்கு முடிய முந்தி, அதின்ரை அலுவலையும் ஒருக்கா முடிச்சுப்

போடவேணும். என்ரை பிள்ளையெண்டா என்ன, என்ரை தம்பியின்ரை பிள்ளையெண்டா என்ன? எல்லாம் சரிதான் எனக்கு. என்னைக் கேக்காமல் பறையாமல் ஆசுப்பத்திரிக்குப் போட்டுதுகள். இஞ்சை வந்து நிண்டுகொண்டு மருந்து செய்விச்சிருக்கலாம்.

கதிர். உண்மைதான் பாருங்கோ. ஏனங்கை போனதுகளோ?

கார். உதுகளின்ரை வேலையெல்லாம் உப்பிடித்தான் தம்பி. மோட்டுச் சனங்கள் சொல்றது கேக்கிறஇல்லை. அதுதான் போகுது. உங்கினை ஆரும் வசதியாய் இருக்கினமே தம்பி? பெட்டை இஞ்சை வந்ததோடை, இவடத்திலையே மறிச்சுச் செய்துபோடவேணும். ஊருக்குப் போனுல் அவள் தாய் ஏதும் கேப்பார் புத்திகேட்டுப் பிரளிபண்ணிப் போடுவாள்.

கதிர். (யோசித்துவிட்டு) ஒண்டு வசதியாய் இருக்குத்தான், பாருங்கோ; நல்ல பொடியன், குணம் நடையெல்லாம் நல்லது. கொஞ்சச் சீதணம் குடுக்கவரும்.

கார். அதெல்லாம் நானே குடுக்கிறன் தம்பி. பெட்டைக்குப் போகவேண்டிய தோட்டமொண்டை அவன் தேப்பன் என்னெட்டை மூவாயிரத்துக்கு ஈடுவைச்சவன். அதைத் திருப்பிக் குடுத்துவிடிறன். அதோடை ஒரு ஆயிரம் ரூபாக் காசும் பெடிச்சியின்ரை கையிலை குடுத்துவிடிறன். நீ அதை முற்றெடு.

கதிர். (யோசித்துவிட்டு) நீங்கள் குடுக்கிற காசை இரண்டாக்கி விடுங்கோ. நான் அதை நிச்சயமாக்கிவிடிறன். அப்ப அவை யாட்பாணம் போகமுந்தி, இஞ்சையே வைச்சு நொத்தீசு போட்டிடுவம். நீங்கள் அதுக்கு

மூந்தி அந்தத் தோட்டத்துத் தொந்தறவையும் நீக்கிக் காசையும் பெடிச்சியெட்டைக் குடுத்துவிடுங்கோ?

கார். சரி, அப்பிடியே செய், தம்பி. அந்தத் தொந்தறவெல்லாம் நான் நாளை நாளையிண்டைக்கிடையிலை நீக்கிவிடிறன். நீ ஆளைப் புடிச்சுப் பேசி, நாளையும் நிச்சயம் பண்ணிப்போடு. அது உன்ரை கெட்டித்தனம். ஆளின்ரை பேரென்ன தம்பி? அவர் ஆர்?

கதிர். அவர் என்ரை ஒரு பெரிய சிநேகிதன் பாருங்கோ. என்ரை சொல்லை ஒருகாலமுந் தட்டமாட்டார். பேர் ஆறுமுகம். கச்சேரியிலை கிளாக்குவேலை. ஏன், அவரை நீங்களுங் கேள்விப்பட்டிருப்பியள்?

கார். ஓ தெரியுந் தம்பி, தெரியும். அவர் நல்லொரு மாப்பிளைதான்.

## களம் 5

### இடம்: கொழும்பு, வடிவேலு வீடு.

கதிர்காமுவும் வடிவேலுவும் ஓர் அறையில் இருக்கின்றனர்.

கதிர். ஆகா அவளின்ரை அளகென்ன, நடையென்ன, உடையென்ன? அடட, எல்லாம் சும்மா பச்சைப் பசுங்கிளிதான்; சும்மா திவ்வியமாயிருந்தாள்.

வடி. அதாரப்பா அது?

கதிர். வேறை யார்? நீங்கள் ஆசுப்பத்திரியிலை கண்ட நேஸ்தான்.

வடி. ஓகோ, அப்பிடியோ சங்கதி? அதுதானே அங்கினை நிண்டு கண்ணடிச்சுக்கொண்டு நிண்டனி?

கதிர். ஆகா, அவளைப் பாத்தால் பசிதீருமே. (ஒரு பாட்டுப் பாடுகிறான்.)

வடி. (இடையில்) அது கிடக்கட்டும். மெய்யெடாப்பா, அம்மான் வீட்டுப்பக்கம் போகஇல்லையே?

கதிர். போனனுன்தான். ஆனால், உன்ரை ஆளைக் காண இல்லை.

வடி. ஆ, அப்பிடியோ? பின்னை ஆரைக்கண்டாய்? அங்கை உள்ள ஆயாவையோ? நீ உப்பிடியானதுகள் எங்கை இருக்கும் எண்டு நிப்பாய்.

கதிர். சீச்சீ, சீச்சீ, அப்பிடியா என்னை நினைச்சுக்கொண்டாய்? இந்த நேசிலேதான் மயங்கிப்போனேன். இது தான் முதல்தரம். வேறை ஒண்டிலும் இல்லை; தெரியுதோ?

வடி. அது கிடக்கட்டும். ஆரை அங்கை கண்டனி?

கதிர். உனது அருமை மாமனுர் கார்த்திகேய பிள்ளை அவர்களை.

வடி. அப்பிடியோ, அவர் என்ன சொன்னுர்?

கதிர். அதுகிடக்க, நீயோ ஒரு சிவில் சேவன்ற், அவற்றை மோளைக் கட்டப்போருய். அவரோ நல்ல அலங்காரமான ஆம்பிளையாயும் இருக்கு. அதோடை அவருக்குப் போதிய பணமும் இருக்கு. பின்னை ஏன் அவருக்கொரு முகாந்திரப்பட்டம் வாங்கிக் குடுக்கக் கூடாது?

வடி. சும்மா புசத்திறதை விட்டிட்டு, கேட்டதுக்கு மறுமொளி சொல்லன்.

கதிர். அவர், இஞ்சை கிட்டவா. இரகசியம். (காதுக்குள் ஏதோ சொல்லுகிருன்.)

வடி. அப்ப, நீ என்ன சொன்னுய்?

கதிர். றயிற்று, ஓமெண்டுதான்.

வடி. அப்ப, இஞ்சை கிட்டவா (இரகசியம் பேசுகிருர்கள்.) விளங்கிச்சுதோ?

கதிர். (தலையைஅசைத்து) எல்லாம் நல்லாய் விளங்கிறது. மேவ அஸ்து.

## களம் 6

### இடம்: கொழும்பு, வடிவேலு வீடு.

சின்னத்தங்கமும் வள்ளியம்மையும் கார்த்திகேய பிள்ளையும் இருந்து பேசிக்கொண்டிருக்கிறார்கள்.

கார். நான் இதுமாத்திரமல்ல, வேறை பிள்ளைக்கு வாற இட்டல் இடைஞ்சல் எல்லாம் பாத்துக்கொள்ளுவன். நீங்கள் ஒண்டுக்கும் யோசியாதையுங்கோ. பின்னை, சீதணம் வேணும். அதுக்கு (சின்னத்தங்கத்திடம் உறுதியொன்றைக் கொடுத்து) அந்தத் தோட்டத்தின்ரை ஈட்டுக்காசு மூவாயிரம் பெற்றுக்கொண்டதாகப் பற்றுச்சீட்டு முடிச்சிருக்கிறன். அதோடை பொடியன் ஒரு இரண்டாயிரம் காசாய்க் கேக்குதாம். இந்தா பிள்ளை, இதிலை ஒரு இரண்டாயிரம் நோட்டாய்க் கிடக்குது. பத்திரம் (கொடுக்கிறார்.) சீதணம் எளுதிற அண்டைக்குமாத்திரம் எடுத்துக் குடுங்கோ. நான் கதிராமுவெட்டைச் சொல்லி நொத்தீசுக்கு நாள் ஒளுங்குபண்ணிவிடிறன்.

சின்ன. அதெல்லாம் சரி, அப்ப இதைப்பற்றித் தம்பிக்கு அறிவிக்கவேண்டாமே?

கார். அதொண்டும் வேண்டாம், தங்கச்சி. அவருக்கு எல்லாம் தெரியும்; அவருங் கூடத்தான் இந்த ஒளுங்கெல்லாம் செய்தது.

சின்ன. அப்ப, பின்னைச் சரி.

கார். அப்ப பின்னை, நான் போட்டுவாறன், தங்கச்சி. அவள் பிள்ளை இராசம்மாவுக்கும் இதைப்பற்றிச் சொல்லிவிடுங்கோவன். பெண்டுகள் சொல்லிறதுதான் நல்லது. அப்ப வாறன் (போகிறார்.)

சின்ன. பின்னை வாருங்கோ, அண்ணை (அவர் போனபின் வள்ளியம்மையைப் பார்த்து) அவர் சொன்ன நியாயம் எல்லாம் சரிதானே, மச்சாள்?

வள்ளி. மெய்தான், பெட்டைக்கும் தலைவிதி உதுதானுக்கும். காசு களைஞ்சு இல்லாத நாங்கள் உந்த வசதியை விட்டிட்டு என்ன செய்யிறது?

சின்ன. அப்ப, பிள்ளைக்கு ஒருக்காக் கூப்பிட்டுச் சொல்லி விடுவம்.

வள்ளி. ஓமெணை மச்சாள். தற்செயலாய் அவள் மறுத்தால் என்ன செய்யிறது?

சின்ன. அவள் மறுக்காள். நான் பாத்துக்கொள்ளிறன். கரும்பு தின்னக் கைக்கூலி வேணுமே?

## களம் 7

### இடம்: கொழும்பு வடிவேலு வீடு.

இராசம்மா தனது விதியை நினைந்து சோகமாய்ப் பாடிக் கொண்டிருக்கின்றாள். பாட்டு முடிந்தவுடன் ஒரு வேலைக்காரன் கடிதம் ஒன்றைக் கொண்டு வருகின்றான்.

வேலை. அம்மா, அம்மா!

இரா. அதாரது?

வேலை. இந்தத் தவாலை உங்களுக்குக் குடுக்கச்சொல்லி ஒரு பொடியன் தந்திட்டுப் போகுது.

இரா. ஆர், எனக்கோ?

வேலை. ஓமம்மா.

இரா. இதாற்றை? (வாங்குகிறாள்.)

வேலை. தெரியாது. அப்ப வாறனம்மா.

இரா. சரி போட்டுவா. எனக்கார் உங்கை தவால் எழுதிறது? (விலாசத்தைப் பார்த்துவிட்டு) மெய்தான்,

எனக்குத்தான் (யோசிக்கிருள்) அது ஆராயிருக்க லாம் ? எனக்கு அறிஞ்சாக்கள் இஞ்சை கொளும்பிலே ஆர் ? ஒருவேளே என்னைக் கொஸ்பிற்றலிலே பாத்த நேசாயிருக்கலாம். (திறந்து வாசிக்கிருள்.) ஓகோ, அத்தான் எளுதியிருக்கிருர். (மூடிக் கவனமாய் வைக்கிருள்.)

## களம் 8

### இடம்: கொழும்பு, சின்னத்தங்கம்வீடு.

சின்னத்தங்கமும் வள்ளியம்மையும் கதிர்காமுவும் நடைசாலேயில் இருக்கின்றனர்.

சின்ன. இராசம்மா ஆயத்தமாய் இருக்கிருளே ?

வள்ளி. ஓம், அவள் இப்பான் உடுக்கிருள்.

சின்ன. மெய்யே, தம்பி கதிராமு, இறயித்தாரை இன்னங் காணயில்லே.

கதிர். இப்ப வந்திடுவார். நீங்கள் எல்லாம் ஆயத்தமாக்குங்கோ.

அப்போது கார்த்திகேய பிள்ளேயும் கமலவேணியும் வருகின்றனர். எல்லாரும் எழும்பி நிற்கின்றனர்.

கார். இருங்கோ, இருங்கோ. எல்லாம் ஆயத்தந்தானே ?

சின்ன. ஓமண்ணே.

கார். தம்பி எங்கை ?

கதிர். இப்ப வந்திடுவார். அவர் மாப்பிளேயோடைதான் வருவார்.

கார். (மணிக்கூட்டைப் பார்த்து) நேரம் வரப்போகுது. இறயித்தார் எங்கை ?

கதிர். வந்திடுவார்.

அப்போது வடிவேலு சீலேப்போட்டளியோடு வருகின்றான்.

கதிர். உதென்ன பாசல் வடிவேலு ?

வடி. அது கூறைச்சீலே. மாப்பிளே தனக்கு வாங்க நேரமில்லே யெண்டு என்னே வாங்கிக்கொண்டரச் சொன்னவர்.

கார். நேரமாகுது. ஏன் சுணங்கிறூர் தம்பி?

வடி. வந்திடுவார். (மற்றவர்களேப் பார்த்து) நீங்கள் எல்லாம் ஆயத்தமே?

சின்ன. ஓம், ஓம் நாங்கள் எப்பவோ ஆயத்தம்.

அப்போது ஐயர் ஒருவர் போட்டளியோடு ஒரு சோக்கப்பையனேயுங் கூட்டிக்கோண்டு வருகின்றூர்.

ஐயர். (ஒரு கதிரையில் இருக்கின்றூர்.) சம்போ சங்கர மகாதேவா. (பையனேப் பார்த்து) எடே இதிலே உட்காரடா.

சொக். ஆம், சாமி.

சின்ன. (வடிவேலுவைப் பார்த்து) ஏன் தம்பி, ஐயர் வந்தவர்?

கதிர். மகன் இப்பவே கலியாணம் முடிக்கப்போறூராம்.

சின்ன. ஆரை?

கதிர், (கமலவேணியைக் குறித்து நோக்கி) உங்கடை மருமோளேத்தான்.

கார். அதென்னெண்டு ரிஜிஸ்டர் பண்ணுமல் செய்யிறது? அதோடை, எத்தினேபேருக்குச் சொல்லவேணும்? இந்தப் படிப்பெல்லாம் படிச்சுக்கொட்டின பிள்ளேக்கு இப்பிடியே கலியாணஞ் செய்யிறது? அதுக்கு நான் ஒத்துக்கொள்ளமாட்டன். என்னத்துக்கோ வந்திருக்கிறன், என்னவோ செய்யப்போறன் எங்கிறியள்.

கதிர். அப்பென்ன வடிவேலு செய்யிறது?

வடி. நான் இண்டைக்கு இந்த நாளுக்குக் கலியாணம் முடிச்சே தீரவேண்டும். உவையள் பயப்பிடுகினம் போலே இருக்கு. என்னிலே அவ்வளவு நம்பிக்கை இல்லேயே?

கார். எப்பிடியெண்டாலும் ஊர்வளக்கத்தை ஒட்டிஎல்லோ நடக்கவேணும். வளிவளியாய் முன்னுக்குச் செய்ய வேண்டியதெல்லாம் செய்யாமல், இப்ப சுடுகுது மடியைப் பிடியெண்டால், என்ன செய்யிறது? அடுத்த நாளுக்கு ரிஜிஸ்டர் பண்ணிப்போட்டு, பேந்து செய்யலாம்.

வடி. அப்ப கதிராமு, ஏன் நிப்பான்? மற்றப் பொம்பிளேயைச் செய்வம்.

கார். ஆ, அப்பிடியும் ஆச்சோ? எனக்கு ஓம்எண்டு சொல்லிப்போட்டு இன்னம் ஒண்டைக் கட்டவோ? அப்பிடிச் செய்தியளெண்டால்,பின்னேத் தெரியும் கார்த்திகேயனுடைய சங்கதி. (கதிர்காமுவைப் பார்த்து) எல்லாம் இந்தக் காவாலிதான் செய்தவேலே. பாரும் தம்பி, உனக்கு என்னவேலே செய்யிறனெண்டு. (பொல்லே ஓங்குகிறார். கதிர்காமு விலகி நிற்கின்றான்)

வடி. ஏன் அம்மான் கதிராமுவைப் பேசிறியள்? இது நான் தான் செய்தவேலே; கதிராமுஅல்ல. உங்களுக்கோ உங்களுடைய மகளுக்கோ அப்மா முற்றுச் சொன்னதேயொளிய நான் சொல்லயில்லேத்தானே. இரண்டாவது, நான் உங்கடை மகளேக் கட்டியிருப்பன். ஆனால் பாருங்கோ, உங்கடை பிள்ளேக்குப் போதிய அளவு பணம் இருக்கு. அதோடை படிப்பிருக்கு. பெரிய உத்தியோகம்இருக்கு. அதே போதும். சில பெண்களேப்போலக் கலியாணம் செய்யாமலே இருந்திடலாம். ஆனால் இந்தப் பிள்ளேயோ ஏளே. ஆகப்

படிச்சது தமிளும் கொஞ்ச இங்கிலீசும்தான். அல்லாமலும், நான் ஊர்மாதிரிச் சீவியம்பண்ணப்போறன். உந்த ஐரோப்பியமாதிரிச் சீவியம் எல்லாம் எனக்கு அலுத்துப்போச்சு. பளையமாதிரிச் சீவியம் சீவிச்சாத்தான் எனக்கு மன ஆறுதலாய் இருக்கும். அதுக்காகத்தான் எல்லாத்தையும் யோசிச்சுப்போட்டு இவவைக் கட்ட முற்றெடுத்தனான்.

கார். (கோபித்துக்கொண்டு) வா பிள்ளை, போவம். மெத்தையிலே வைச்சாலும் சருகுக்கை போறது சருகுக்கைதான். (மகளுடன் போகின்றார்.)

பொருளோ பொருள்

முற்றும்

# நாடகத்துள் வரும்
# அரிவையர் ஆடவர்

| | | |
|---|---|---|
| முனிவர் | ... | முன்மொழி பின்மொழி [பேசுவோன் |
| வச்சிர நாகர் | ... | அப்புக்காத்து |
| சங்கரநாகர் | ... | வழக்காளி |
| முடிநாகர் | ... | வச்சிரநாகர் நண்பன் |
| சுந்தர நாகி<br>வசந்த நாகி | ... | மாதர் முன்னேற்றவாதிகள் |
| காளிங்க நாகர் | ... | பிறக்கிருசியார் |
| பரிமள நாகி | ... | முடிநாகர் மகள் |
| குமாரநாகர் | ... | முடிநாகர் மருகன் |
| அங்கத நாகர்<br>புலிக்குட்டி நாகர்<br>பால நாகர் | ... | குமார நாகர் நண்பர் |
| அன்ன நாகி | ... | முடிநாகர் மனைவி |
| மாணிக்க தேவர் | ... | கோப்பிக்கடைக்காரன் |
| சோதி நாகி | ... | குமாரநாகர் தாய் |
| கமல நாகி | ... | பரிமளநாகி தோழி |

கதைநிகழிடம் : நாகபுரி


கநதர்வ
நாடு
கின்னர
நாடு
அவண
நாடு
தேவ
நாடு
மேரு
மலை
நாக
நாடு
நாக
புரி
சம்புத்
தீவகம்
தெங்கந்திவு

# முன்மொழி

முனிவர் ஒருவர் வருகின்றார். எதிரே இருக்கும் அண்ட கோளகைப் படமொன்றைத் தன் கையிலுள்ள கோலினால் சுட்டிக்காட்டிப் பின்வருமாறு பேசுகின்றார்.

பூலோக மாந்தர்களே !

யான் இப்பொழுது புவர்லோகம், மகாலோகம், சத்தியலோகம் ஆகிய மேலுலகங்களிலும், அதல விதல பாதலமாகிய கீழ்உலகங்களிலும் சஞ்சாரம் செய்துவிட்டு, இப்பொழுதுதான் பூலோகம் வந்துள்ளேன். யான் இப்படிச் சஞ்சாரம் செய்துவருகையில் இந்த அண்ட கோளகையில் ஓரிடத்தில் வாழும் மக்கட்குழுவினரின் வாழ்க்கைமுறைகளைக் கூர்ந்து நோக்கினேன். அவை மிகவும் விநோதமாக விருக்கக்கண்டேன். நீங்களும் அவ்விந்தையைக் கண்டு சிந்தை மகிழுங்கள்! இதோ பாருங்கள் என் கையில் இருப்பதை: இதுதான் என் மந்திரக்கோலாகிய சுக்குமாந்தடி. என் மனதில் சில உருக்களைச் செபித்து இதை ஒருமுறை சுழற்றுவேனாகில், இந்த உலகத்தில் எங்கு வேண்டுமென்றாலும் அங்கு உங்களைக் கொண்டுபோய்ச் சேர்த்துவிடும்.

இஃது இங்ஙனமிருக்க, சக்கரவாளம் என்னும் அண்டகோளகை ஒன்று உண்டு அல்லவா? அங்கே இருக்கும் தீவகங்களில் ஒன்று சம்புத்தீவகம். இதைச்சுற்றி ஐந்நூறு சிறுதீவுகள், சந்திரனைச் சுற்றி நட்சத்திரங்கள் இலங்குவதுபோல நின்று துலங்குகின்றன. இச்சிறு தீவுகளில் ஒன்று தெங்கந்தீவு. இத்தீவில் பலவகையான மக்கள் வாழுகின்றனர். இம் மக்களின் வாழ்க்கைமுறைகளுக்கேற்ப, இத்தீவை, தேவநாடு, அவுணநாடு, கின்னரநாடு,

நாகநாடு, கந்தருவநாடு, என ஐந்து பிரிவுகளாகப் பிரித்துள்ளனர். தேவநாட்டில் இருந்து தேவர்களும் அவுணநாட்டிலிருந்து அவுணர்களும், கின்னரநாட்டிலிருந்து கின்னரர்களும், நாகநாட்டிலிருந்து நாகர்களும், கந்தருவநாட்டிலிருந்து கந்தருவர்களும் இத்தீவிலே வந்து குடியேறி ஒன்றுகூடி வாழ்க்கை நடாத்துகின்றனர். நாகநாட்டின் தலைநகர் நாகபுரி.

இம்மக்களின் வாழ்க்கைமுறைகளை, உங்களுக்கு யான் காண்பிப்பான்வேண்டி உங்களை அங்கே என் சுக்குமாந்தடிமூலம் கொண்டுசெல்கிறேன். (தன்கையிலுள்ள தடியைச் சுழற்றுகின்றார்.) இதோ நீங்கள் நாகநாட்டின் தலைநகராகிய நாகபுரியில் இப்பொழுது இருக்கின்றீர்கள். அங்கே நடக்கும் விநோதங்களைப் பாருங்கள்.

# தவருன எண்ணம்

## உறுப்பு I

### களம் 1

**இடம்: தெங்கந்தீவு, நாகநாடு: நாகபுரி, அப்புக்காத்து வச்சிரநாகர் வீடு.**

அப்புக்காத்து வச்சிரநாகர் மேசைக்கு அருகில் ஒரு கதிரையிலே இருக்கின்ருர். அவருடன் இரண்டு வழக்காளிகள் பேசிக்கொண்டு இருக்கின்றனர்.

**வச்சிர.** *என்ன சங்கரநாகரே, கேட்டீரா நான் சொன்னதை?*

**சங்கர.** *ஓம் ஐயா.*

**வச்சிர.** *நல்லாய் விளங்கிக்கொள்ளவேணும். நான் சொன்ன மாதிரி நீதிவான் கேட்டாலும் சொல்லிப்போட வேணும். ஒண்டையும் மறந்துபோகப்படாது.*

**சங்கர.** *ஓம் ஐயா, நான் மறந்துபோகமாட்டன்.*

அப்பொழுது முடிநாகர் ஒரு வழக்குக்கோப்பியுடன் வருகின்ருர்.

**வச்சிர.** (அவரைக் கண்டவுடன் எழுந்து) *வாருங்கோ ஐயா, வாருங்கோ. இந்தக் கதிரையிலை இருங்கோ.*

முடிநாகர் ஒரு கதிரையிலே அமருகின்ருர்.

**வச்சிர.** (திரும்பவும் சங்கரநாகரைப் பார்த்து) *இப்ப நல்லாய் விளங்கிக்கொண்டுதுதானே? நான் சொன்னபடியே சொல்லிப்போடு; உந்த வளக்கை நான் பறக்க வச்சிர்றன்.*

**சங்கர.** (தனது வேட்டிமுடிச்சை அவிழ்த்து அப்புக்காத்தரிடம் காசைக் கொடுத்துக்கொண்டு) *ஏதோ உங்கடை*

42303

தயவுதான் இருக்கவேணும் ஐயா; நாங்கள் ஏழையள். இந்த வளக்கை வெல்லாவிட்டால் நாங்கள் இந்த ஊரைவிட்டுக் குடிஎழும்பவேண்டியதுதான்.

வச்சிர. அதுக்கும் ஒரு பேச்சோ. நீ பயப்பிடாதை போட்டு வா. (முடிநாகரை நோக்கி) அந்த வளக்குச் சாட்சியள் எல்லாம் ஆயித்தப்படுத்திப்போட்டியளோ?

அப்பொழுது சங்கரநாகர் விடைபெற்றுக்கொண்டு போகிறார்.

முடிநா. ஓந்தம்பி, நீங்கள் சொல்லித்தந்தமாதிரி எல்லாம் சொல்லிக்குடுத்து அவங்களுக்குப் பாடம்பண்ணி வச்சிருக்கிறன். பிழைவிடமாட்டாங்கள். நல்ல கோட்டுப் புலியள்.

வச்சிர. அது இருக்க, என்ன கிரவுஞ்சபுரத்திலை வைச்சுப் பிடிச்சமாதோ?

முடிநா. ஓந்தம்பி. அது என்னவெண்டால், நம்முடைய அடுத்தவீட்டு மணிநாகர் இருக்கிறாரே; அவர் கிரவுஞ்சபுரத்துக்கு அடுக்கஉள்ள மாயபுரத்துக்குப் போகவேணும் எண்டு என்ரை காறைப் பிடிச்சார். அவர் அங்கை போட்டுத் திரும்பிவர இரவு பத்து மணியாய்ப் போச்சு. அவர் வரயுக்கை எச்சைசுப் (Excise)பாட்டிக்காறர் றேட்டுநடுவிலை வந்து காறை மறிச்சாங்களாம். மறிச்சு உடனே இஞ்சிப்பத்தர் (Inspector) வந்து "இந்தக் காறை ஒருக்காச் சோதிக்கவேணும், நிறுத்து" எண்டு சொன்னாரும். உடனை அங்கைநிண்ட பீயோன்மார் (Peons) காறுக்கிளை ஏறி அங்கையும் இங்கையும் பாத்துப் போட்டு "இந்தக் கார் கொஞ்சம் ஐமிச்சமான நேரத்திலை வந்திருக்கு. சோதிக்கவேணும்; எச்சைஸ்

டேசனுக்குக் (Excise Station) கொண்டுவா" எண்டு சொல்லிப்போட்டுக் காறையும் இறைவரையும் கொண்டுபோனுங்களாம். அங்கை அவங்கள் சொன்னமாதிரி இந்த மடையன்கள் கையெளுத்துப் போட்டிட்டு வந்திட்டாங்கள். இப்ப 25 ரூத்தல் அவினைக் கார் எஞ்சினுக்கை மறைச்சு வைச்சுக் கொண்டு போனதெண்டு வளக்கு வந்திருக்கு. இதுக்கு மணிநாகர் எண்டாலோ, அல்லது என்ரை இறைவர் எண்டாலோ அப்பிராணியள். இப்பிடியான வேலை செய்யக்கூடிய ஆக்கள் அல்ல. ஏதோ உங்கினை உள்ளவங்கள் எச்சைசுப்பாட்டியைத் தட்டிவிட்டு வேணும்எண்டு வைச்சுப் பிடிச்சுப்போட்டாங்கள். இதாலை எவ்வளவு தொந்தறவு!

வச்சிர. உதென்ன தொந்தறவு, பாருங்கோ. அந்த எச்சைசுக்காறங்களுடைய வாய்ப்பிறப்புப் போன தவணையில் வாய்க்க இல்லை. உதைப் பறக்க விட்டிடலாம்.

முடி.நா, இந்த வளக்கு நடத்துவதற்கு இந்தமுறை சுப்பிறீண்டன் (Superintendent) வாருனும்.

வச்சிர. எந்தக் கடவுள் வந்தால்த்தான் என்ன! ஏன் முந்தி முந்தி வளக்குகளிலை நடந்தது தெரியுந்தானே. வீடிப்போயிலை வந்த வளக்கிலை கையும் மெய்யுமாகத் தோணியோடை பிடிச்சதுதானே. வளக்கிலை என்ன செய்துபோட்டினம்? பூலோகத்திலை சண்டை நடந்தபோது ஏற்றுமதி இறக்குமதிக் கட்டுப்பாடு இருந்தது தெரியுந்தானே. அப்போது பெமிற்று (permit) இல்லாமல் டிங்கியிலை அரிசி கொண்ணந்து இறக்கினபோது இவையள் பிடிச்சுப்பாத்தினந்தானே. அந்த வளக்கையும் உவையென்ன வெண்டவையோ? இது எல்லாத்தையும் நான்தானே பேசி வெற்றி

யெடுத்துத்தந்தது. அந்த வளக்குகளைப்போல இந்த வளக்குக் காப்பங்குகூடப் பொறுப்பில்லை. இது ஒண்டுக்கும் யோசியாதையுங்கோ. வெற்றி எடுக்கலாம். நான் பாத்துக்கொள்ளிறன்.

முடிநா. அது எனக்குத் தெரியுந் தம்பி. அந்தமுறை நான் அந்த அரிசியைக் கொண்டராட்டில் இந்த ஊரிலை உள்ள நாகர் சாதிஎல்லாம் என்ன பாடுபட்டிருக்குப்? ஒரு மணி அரிசி இல்லாமல் இந்தச் சனம் என்ன பாடுபட்டுது? இப்பிடியாகச் சனங்கள் பாடுபடயுக்கை பெமிற்று இல்லாமல் அரிசியை இறக்கினது குற்றமே? ஊர் நன்மைக்காகத்தானே செய்தனான்.

வச்சிர. இந்தக் கவுண்மேந்தின்ரை (Government) வேலை எல்லாம் உப்பிடித்தான், பாருங்கோ. இறேனிஸ் பிடிக்கிறவன் சரியாயிருந்தால் உந்தப் பிளையும் வருமே? அதென்ன பாளிமேந்துக்கு (Parliament) நாங்கள் அனுப்பினவங்கள் சரியில்லை. உவங்கள் என்ன ஊர் நன்மைக்குப் போனவங்கள் எண்டு நினைச்சுக்கொண்டியளே? ஊரவன் எக்கேடு கெட்டால் என்ன? அவங்கள் தாங்கள் பெரிசாக வந்தாப் போதும். தங்கடை பிள்ளைகுட்டியள், மச்சான் மாமன் நல்லாயிருக்கிறதுக்கெல்லோ அவங்கள் போனவங்கள்!

முடிநா. நீங்கள் சொல்றது மெத்தச் சரிதான், தம்பி. ஏதும் ஆனமானவங்கள் பாளிமேந்துக்குப் போனவங்களே? போறது எல்லாம் சிலுவட்டையள்தானே.

வச்சிர. அது சரிதான், பாருங்கோ. பாளிமேந்துத் தெரிவும் கிட்டடியிலை வருகுது. இந்தமுறை நல்லாக்களைத்தான் பிடிச்சனுப்பவேணும். எப்பிடியோ பாளிமேந்திலை அவுணர்தான் கூட. அவங்கள்தான்

பெரும்பான்மைக் கட்சி. தேவரும், கந்தருவரும், கின்னரரும், நாகரும் சிறுபான்மை. இனிமல், தேவர்பாட்டியை ஒண்டிரண்டு மந்திரிப் பதவி யைக் குடுத்துப் பிடிச்சுவிட்டாங்கள் எண்டால் நாகர்பாட்டியின்ரை நிலை அதோ கதிதான். ஆனபடியால், நாகருக்குள்ளையும் சரியான ஆக்கள் போனால்தான் பாளிமேந்திலை நல்ல வேலை செய்யலாம். எண்டாலும், அதுக்கு நாகருக்குள்ளை ஆனமானவன் ஆர் வரப்போருன்?

முடி நா. (ஆலோசித்துவிட்டு) நாகருக்குள்ளை ஆக்கள் இல்லா மல் அல்லத் தம்பி. வாக்கு வல்லமையோ வேறு எந்தக் கெட்டித்தனமோ, இவை எல்லாம் உள்ள நாகர் இருக்கினந்தான்; ஆனல் அப்பிடிப்பட்டவை தெரிவுக்கு வரக் கொஞ்சம் பஞ்சிப்படுகினம். சும்மா ஒண்டுந் தெரியாத முட்டாள்கள்தான் முன்னுக்கு வாருங்கள்.

வச்சிர. ஏனப்பிடிச் சொல்றியள்?

முடி நா. பின்னை என்ன தம்பி, உங்களைப்போலை ஆக்கள் தெரிவுக்கு முன்வந்தால் ஆகாதே? அப்பிடி வந்தால் நாகர் குலத்துக்கும் நாகநாட்டுக்கும் எவ்வளவு நன்மையாக இருக்கும்?

வச்சிர. ஏன் அப்படிச் சொல்றியள்? என்னலை என்ன முடியும்?

முடி நா. அப்பிடிச் சொல்லாதையுங்கோ. உங்கள் தரவளி தெரிவுக்கு வராமல் பின்னுக்கு நிற்கிறதாலைதான் இந்த நாகநாட்டுக்கு வந்த கயிட்டமெல்லாம். இல்லை, உண்மையாகத்தான் சொல்றன். நீங்கள் இந்தமுறை எண்டாலும் ஒருக்காத் தெரிவுக்கு வரக்குடாதோ?

வச்சிர. அதுக்கென்ன செய்யிறது, பாருங்கோ? வேறை வேறை ஆக்களும் என்னை உப்பிடித்தான் கேட்டினம். நான் இன்னும் ஒரு முற்றம் சொல்லஇல்லை. (தலையைச் சொறிந்துகொண்டு) கரைச்சல் பிடிச்ச வேலை.

முடிநா. உப்பிடிப் பாத்துக்கொண்டிருக்க ஏலாது. எங்கடை பகுதிக்கு நீங்கள்தான் வரவேணும். நாங்கள் எல்லாருமாகச் சேந்து வேலைசெய்து உங்களை ஒரு விதமாக அனுப்பிவிடுறம்.

வச்சிர. சரி, நான் யோசிச்சுப் பாக்கிறன்.

## களம் 2

### இடம்: சுந்தரநாகி வீடு.

சுந்தர நாகியும் வசந்த நாகியும் ஒருவரோடொருவர் பேசிக்கொண்டிருக்கின்றனர்.

வசந்த. இந்த நாகநாட்டுப் பெண்கள் எவ்வளவு அறியாமையில் மூழ்கி இருக்கிறார்கள். பூலோகத்திலோ, புவர்லோகத்திலோ, சத்திய லோகத்திலோ, அல்லது பாதலம் முதலிய கீழ்உலகங்களிலோ உள்ள பெண்கள் எவ்வளவு முன்னேற்றம் அடைந்திருக்கிறார்கள்? இங்கு என்றாலோ பழைய காலம் போல மிருகங்கள் போலவே இன்னும் வாழ்ந்து வருகின்றார்கள்.

சுந்தர. வசந்தா! நீ சொல்வது ரெம்பவும் சரிதான். இந்த நாட்டிலே பெண்கள் எப்ப பார்த்தாலும் தங்கள் வீடு, பிள்ளைகுட்டிகள், தங்கள் புருஷன்மார் இவைகளைப்பற்றியே ஓபாது கவலைப்படுகின்றனர். நித்திரை விட்டு எழும்புவதும் பிள்ளைகுட்டிகளைப் பார்ப்பதும், புருஷன்மாருக்குத் தொண்டு செய்வதும், உண்பதும் உறங்குவதுந்தான் இவர்கள் வேலை.

வேறை, ஊர் இருக்குதே, தேசம் இருக்குதே, இவைகளைப்பற்றிக் கொஞ்சமும் யோசிப்பதில்லே. படிப்பு என்ருல் சுத்த சூனியம். பழைய கர்நாடகங்கள். சும்மா, கொஞ்சம் நாகமொழியைத்தான் படிப்பது. மற்றும் இங்கிலீசோ, (English) சயன்சுகளோ (sciences), பொலிற்றிக்சோ (politics), எக்கனமிக்சோ (economics), ஒன்றுந் தெரியாது. அவற்றைப் படிப்பதும் இல்லே.

வசந்த. அது மெய்தான் சுந்தரி. உந்த மேற்படிப்புக்கள் படியாது விட்டால் எந்த நாட்டிலுள்ள பெண்களும் முன்னேற முடியாது.

சுந்தர. இதற்காகத்தான் நான் found பண்ணியிருக்கும் சோஷல் லீக் (social league) மூலம் பெண்களாகிய நாம் ஒவ்வொருவரும் கிராட்யுவேற் (graduate) ருக இருக்கத் தெண்டிக்கவேண்டும். அப்படி வந்துவிட்டால் இந்நாட்டில் இப்போது இருக்கும் கீழ்நிலே ஒழிந்துவிடும்.

வசந்த. அத்துடன் இங்குள்ள ஆடவர் ஒவ்வொருவருக்கும் இப்படிச் சொல்லிக்கொடுக்கவேண்டும்: அதாவது நீங்கள் ஒவ்வொருவரும் சீதனத்துக்கோ வடிவுக்கோ கலியாணம் முடிக்கக்கூடாது. படிப்புக்கே கலியாணம் முடிக்கவேண்டும். நீங்கள் கலியாணம் முடிக்கும் பெண் குறைஞ்சது பீ. ஏ. பாசுபண்ணி இருக்கவேண்டும்.

சுந்தர. கட்டாயம். பீ. ஏ. பாசுபண்ணின ஒரு பெண்பிள்ளை வெறும் பண்டிதனேயோ அல்லது சீனியர் பாசு பண்ணினவனேயோ கட்டுவாள் என்று நினைக்கிறியோவே? ஆனபடியால் பெண்கள் ஒவ்வொருவரும் கிராட்யுவேற் ஆகினல் ஆண்கள் ஒவ்வொருவரும்

கிராட்யுவேற்றுகத்தானே வேண்டும். உலகம் தங்கி இருப்பது பெண்களில்தானே.

வசந்த. நிச்சயம். சர்வம் ஸ்தரீமயம் ஜெகத்.

கதவிலே யாரோ தட்டும் ஒலி கேட்கின்றது.

சுந்தர. Yes. Come in.

அப்போழுது அப்புக்காத்து வச்சிரநாகர் வருகின்றார்.

வச்சிர. Good after-noon ladies. How do you do ?

சுந்தர. Good after-noon Vajira. Very well. Thank you. Would you kindly take a seat.

வச்சிர. Thank you. (ஒரு கதிரையில் அமருகின்றார்.) என்ன கனக்கக் கதைச்சுக்கொண்டிருக்கிறியள் ? என்ன பாரதூரமான விஷயமோ ?

சுந்தர. ஒண்டும் இல்லை. எங்கள் நாட்டின் நிலைமையைப் பற்றித்தான் பேசிக்கொண்டிருக்கிறோம்.

வச்சிர. ஓகோ, நாட்டின் நிலைமை என்றால் நாட்டுப்பெண்கள் நிலைமையைப்பற்றித்தான் பேசிக்கொண்டு இருப்பீர்கள் என நினைக்கிறேன். என்ன அப்பிடித்தானே?

சங்கர. சரியாகப் பிடிச்சிருக்கிறீர்கள்.

வச்சிர. உப்பிடிப் பேசுவதற்கு எங்கள் நாட்டுப்பெண்கள் என்னதான் செய்துவிட்டார்கள்.

சுந்தர. ஒன்றும் இல்லை. அவர்கள் கல்விமுன்னேற்றத்தைப் பற்றித்தான் யோசித்துக்கொண்டிருக்கிறோம். எங்கள் சங்கத்திலே பேசி முடிவுகட்டியது என்னவென்றால் பெண்கள். ஒவ்வொருவரையும ஒவ்வொரு கிராட்யுவேற்றுக வரப்பண்ணவேண்டும். அப்படியானால் அவர்கள் கெதியில் முன்னேறிவிடுவார்கள்.

வசந்த. அத்துடன் ஒவ்வொரு ஆடவனும் ஒவ்வொரு கிராட்புவேற்றைத்தான் கலியாணம் செய்யவேண்டும் என்று கட்டாயப்படுத்தவேண்டும்.

சுந்தர. அப்படியானுல் கிராட்புவேற்ருன பெண்பிள்ளை குறைந்த படிப்புள்ள ஆடவனைக் கட்டமாட்டாள். பெண்கள் இப்படிக் கல்வியில் முன்னேறி இருப்பதைக் கண்டால் ஆடவரும் கிராட்புவேற்ருவார்கள். அதனுல் உலகம் முன்னேறிவிடும்.

வச்சிர. இப்படி நடக்குமானுல் கிராட்புவேற் அல்லாத ஆண்கள் கலியாணம் முடித்தல் பெரிய திண்டாட்டமாய்த்தான் வரப்போகுது.

வசந்த. அப்படி இருந்தால்தான் நமது நாடு கல்வியில் விருத்தியடையும். உண்மையிலே படிப்பில்லாதவருக்குக் கலியாணம் என்னத்திற்கு? அப்படியான கலியாணத்தினுல் உலகத்திற்கு நட்டந்தான்.

வச்சிர. ஓகோ, அப்பிடியோ சங்கதி? இப்ப என்னளவில் பாத்துக்கொள்ளுவம். நான் இன்றர்மீடியேற்று (inter-mediate) படிச்சுப் பாசுபண்ணிப்போட்டுத்தான் உலோ (law) படிச்சு அப்புக்காத்தானனுன். நானும் ஒரு கிராட்புவேற் அல்ல. அப்ப என்ரை பாடும் கலியாணத்துக்குத் திண்டாட்டந்தானே? Hear! Hear! Dear ladies! நல்லாய் இருக்கு உங்கள் சோஷல் லீக்கும் அதன் வேலைகளும்.

வசந்த. அதுகிடக்க, சுந்தரி! வாற செவ்வாய்க்கிளமை மாதர் முன்னேற்றச் சங்கத்திலே பேசுவதற்கு ஒரு speaker வேணும் என்று சொன்னுய். மிஸ்டர் வச்சிரா இருக்கிருரே; அவர் நல்ல உரிசியாகப் பெண்களுக்குப் பிடிக்கக்கூடியவிதமாய்ப் பேசிறவர்; அவரைப் போட்டால் என்ன?

சுந்தர. கேக்கத்தான் நானும் எண்ணி இருக்கிறன். (அட்புக் காத்தரைப் பார்த்து) அப்ப வச்சிரா! என்ன subject இலே பேசப்போருய்? பேசுப்போது நல்ல சிம்பிள் (simple) ஆய்ப் பேசிப்போடு. அல்லாவிட்டால் நீ பேசிறதை எங்கள் சங்கப்பெண்கள் விளங்கிக் கொள்ள மாட்டார்கள்.

வச்சிர. சச்சாய், எனக்கு வந்துபேச நேரமில்லைப் பாருங்கோ. வேறை ஒருவேலை இருக்கு.

வசந்த. ஓகோ, சொன்னுப்போலே, வச்சிரநாகர் இந்தப் பகுதிக்குப் பாளிமேந்துக்குக் கொன்ரெஸ்ற் (contest) பண்ணப்போருர் எண்டு ஒரு கதை உலாவுது. அதுக்குத்தான் ஆயித்தம் செய்யப்போருரோ? (வச்சிர நாகரைப் பார்த்து) மெய்யே வச்சிரா! உன்ரை முதல் எலெச்சன் (election) கூட்டம் எப்ப வைக்கப் போருய்? வாற செவ்வாய்க்கிளமை இல்லைத்தானே?

சுந்தர. ஓகோ, நீங்களும் எலெச்சனுக்கு வாறியளோ? அது மிச்சம் நல்லதுதான். ஒருவேளை செவ்வாய்க்கிளமை அதுக்காக ஆரும் ஆக்களைக் காணப்போறியளோ?

வசந்த. சரி, கொன்ரெஸ்ற்பண்ணிற நோக்கம் இருந்தால் இந்தக் கூட்டத்துக்கும் அவர் வரத்தானேவேணும். அவர் கட்டாயம் வருவார், சுந்தரி. அதுக்கு நீ யோசியாதை.

சுந்தர. நாங்கள் கேக்கிறதுக்கு மறுக்காதையுங்கோ. செவ்வாய்க்கிளமை வந்து பேசினல் வச்சிரா, சோஷல் லீக், மாதர்முன்னேற்றச் சங்கம், Womens' International Federation Womens' Inter-Planetary Union, Ladies League இவைகளில் உள்ள மெம்பேர்ஸ் (members) எல்லாரையும் உங்களுக்கே

எலெச்சனிலே வோட் (vote) போடச் செய்திடுவம். இந்தப் பகுதியில் உள்ள வோட்டேர்சிலே (voters) அரைவாசிப்பேர் பெண்கள். அந்த வோட்டு முழுக்க உங்களுக்கு எண்டு நம்பி இருக்கலாம். அதோடை எலெச்சனிலே உங்களுக்காக நாங்கள் 'வோக்' (work) பண்ணுவம்.

வச்சிர. நீங்கள் எனக்காக 'வோக்' பண்ணுவியள் எண்டு தெரியுந்தானே.

சுந்தர. அப்ப தவருது வந்துவிடவேணும். மீற்றிங் (meeting) 7½ மணிக்கு. Subject–" The Bondage of Marriage." Do not disappoint me.

## களம் 3

### இடம்: நாகநாடு, நாகபுரி; முடிநாகர்வீடு.

அப்புக்காத்து வச்சிர நாகரும் பிறக்கிருசி காளிங்க நாகரும் முடிநாகர்வீட்டு நடைசாலையில் வந்து நிற்கிருர்கள்.

காளிங். (செருமிக்கொண்டு) ஐயா, முடிநாகரே! முடிநாகரே! ஐயா !!

(உள்ளுக்கு) உதார் அது?

காளிங். அது ஏன்? நான்தான்; காளிங்கநாகர். ஒருக்கா இஞ்சை வந்திட்டுப் போங்கோ. வேறையும் ஒரு ஆள் வந்திருக்கு.

முடிநா. (வெளியே வந்து) என்ன வெள்ளண வந்திருக்கிறியள். என்ன காரியம்? வந்திருங்கோவன்.

மூவரும் நாற்காலியில் அமருகின்றனர்.

காளிங். ஒண்டும் இல்லை, ஐயா. நேத்துஇராத்திரிப் பேசிக் கொண்டு இருந்தோமே, ஐயாவின்ரை எலெச்சனைப் பற்றி; அதைப்பற்றித்தான் வேறை ஆக்களோடை

யோசிச்சுப்போட்டு நொமினேசன் பேப்பர் (nomination paper) உக்குக் கையெழுத்துப் போட உங்களைக் கூட்டிக்கொண்டு போக வந்திருக்கிறம்.

**முடிநா.** ஆ........ ஆரும் பெரியஆக்கள் எல்லோ போட வேணும்? நான் என்னத்துக்கு.

**காளிங்.** சீச்சீ, என்ன நீங்கள் சொல்றது? இந்த ஊருக்கை இப்ப உங்களைவிடப் பெரியாக்கள் இருக்கினமே? எல்லாரும் உங்களைத்தான் பெரியாளாகக் கணிச்சு வைச்சிருக்கினம். நீங்கள்தான் கையெழுத்துப் போடவேணும். அப்பதான் மரியாதையாக இருக்கும். இப்ப போகவேணும் கச்சேரிக்கு. மறுக்காமல் வெளிக்கிடுங்கோ.

அப்போது கார்ச்சத்தம் ஒன்று கேட்கின்றது.

**முடிநா.** (வீட்டுக்குள் திரும்பிப்பார்த்து) மோனை, பரிமளம்! பரிமளம்!!

(உள்ளுக்கு) என் ஐயா.

**முடிநா.** பள்ளிக்குப்போகக் கார் வந்திட்டுது. நேரமாச்சு, கெதியாய் வெளிக்கிடன்.

(உள்ளுக்கு) வந்திட்டன், கொஞ்சம் நிக்கச்சொல்லுங்கோ.

**வச்சிர.** எங்களுக்கு நேரமாச்சுது, பாருங்கோ. கெதியாய்ப் போய் உடுத்துக்கொண்டாருங்கோ.

**காளிங்.** காலமை சாப்பிட்டாச்சுத்தானே?

**முடிநா.** ஓ, அதெல்லாம் எப்பவோ முடிஞ்சுது.

முடிநாகர் உள்ளே போகின்றார். அப்பொழுது அவர் மகள் பரிமள நாகி புத்தகக்கட்டுடன் நடைசாலைக்கு ஊடாக வெளியே போகின்றாள். வச்சிர நாகரும் காளிங்க நாகரும் அவளைத் திரும்பிப் பார்க்கின் றார்கள்.

வச்சிர. (காளிங்கநாகரை நோக்கி மெதுவாக) ஆர் உந்தப் பிள்ளை ?

காளிங். அது உங்களுக்குத் தெரியாதே? உவதான் அவற்றை மோள்.

வச்சிர. ஓகோ படிக்கிருவோ? எங்கை?

காளிங். நாகபுரி லேடீஸ் கொலிச்சிலை. (Ladies College)

வச்சிர நல்லொரு பள்ளிக்குடந்தான். மெத்தத் திறமான படிப்பு. இந்த நாளையிலை உள்ள ஏறுமாருன பளக்கம் ஒண்டும் அங்கை இல்லை. அங்கை படிக்கிற பிள்ளையள் மரியாதையாக இருக்குதுகள்.

காளிங். இந்தப் பிள்ளையின்ரை குணத்தையும் படிப்பையும் பற்றி எல்லாரும் உங்கை மெத்தப் பேராப்பேசுகினம், பாருங்கோ. நல்ல ஒரு அடக்கமான பிள்ளை. இந்த நாளையில் எடுப்புச் சாய்ப்பு ஒண்டும் இல்லை.

வச்சிர. (தலையை அசைத்து) Oh, I see.

## களம் 4

### இடம்: நாகபுரி, சுந்தர நாகி வீடு.

சுந்தர நாகியும் வசந்த நாசியும் பேசிக்கொண்டு இருக்கின்றனர்.

வசந்த. அண்டைக்கு அப்புக்காத்தர் என்ன கலாதியாகப் பேசினுர். கேட்டுக்கொண்டு இருந்தவை எல்லாரும் விளுந்து விளுந்து சிரிச்சினம். நல்ல முசுப்பாத்தியான பேச்சு.

சுந்தர மெய்தான், உப்பிடி நல்லாகப் பேசுவர் எண்டு நான் நினைச்சிருக்கயில்லை. It was marvellous. எலெச்சனில் இவருக்கு வெற்றிவந்தால் மாதர் சங்கத்துக்கும்

ஒரு வெற்றிதான். அதனல் இந்த நாட்டுப் பெண் களை எல்லாம் சீர் திருத்திக் கொள்ளலாம்.

வசந்த. எங்களின்ரை சங்கத்துக்கு ஒரு டோனேசன் (donation) தரும்படி அவரைக் கேட்டால் என்ன? தக்க ஒரு புள்ளி. காசு பிடிச்சு வைச்சிருக்கிறர், தரு வார். அதோடை பெண்கள் விஷயத்திலே அவருக்கு ஒரு கண் இருக்குத்தானே.

சுந்தர. ஓம், ஓம், நானும் அவரை எலெச்சன் வெண்டாப் போலே அதைப்பற்றிக் கேக்கத்தான் இருக்கிறன். கட்டாயம் தருவார். அதுக்கு ஒரு ஐமிச்சமும் இல்லே.

வசந்த. உண்மைதான். நீ கேட்டால் என்னதான் தரமாட் டார்.

சுந்தர. என்னப்பா, ஒரு விதமாய்ப் பேசிருய்?

வசந்த. சாய் சாய், அப்பிடி ஒண்டும் இல்லே. எனப்பா, உள்ளதைச் சொன்னல் உடம்பெல்லாம் நோவா னேன்.

வச்சிர. (உள்ளே வந்து) Good-morning ladies. I hope I have not disturbed you.

வசந்த. No, no, certainly not. Take your seat please. (வச்சிர நாகர் அமருகின்றார்)

வச்சிர. அண்டைக்கு உங்கடை மாதர் முன்னேற்றச்சங்கத் திலே நான் பேசினது உங்களுக்குத் திறுத்திதானே?

வசந்த. ஓமோம் மெத்தத் திறுத்தி. அங்கை இருந்தவை எல் லாரையும் hypnotise பண்ணிப்போட்டியள். அந்த speech ஆலே இவடத்துப் பெண்களுக்கை ஒரு விதமான Revolution வரும்போலே இருக்கு. இப்பிடி உங்களைப்போலே நாலுபேர் இருந்தால் இந்த நாட்டுப் பெண்கள் எல்லாருக்கும் salvation தான்.

இருபதாம் நூற்ருண்டிலேகூடப் பழைய tradition இலே கட்டுப்பட்டு என்ன அக்கப்பாடுபடுகுதுகள்.

வச்சிர. ஏதோ நீங்கள் பேசச்சொன்னியள், பேசிவிட்டன். அவ்வளவுதான். அது இருக்க, உங்கடை மாதர் முன்னேற்றச்சங்கம் என்னை இந்தப் பாளிமேந்து எலெச்சனிலை support பண்ணுந்தானே? நாசனல் பாட்டிக் (National Party) காறர் வந்து வந்து வேலைசெய்து திரியினமாம். ஒருவேளை உங்கடை மாதர்சங்கமும் அவன்களின்ரை பக்கத்துக்குச் சேந் தாலும் சேந்துவிடும்; கவனமாய்ப் பாத்துக்கொள்ள வேணும்.

வசந்த. சச்சாய், ஒண்டுக்கும் பயப்படத் தேவையில்லை. அப்பிடி ஒண்டும் நடவாது. நாசனல் பாட்டிக்காறர் எல்லாம் முதலாளிவர்க்கத்தைச் சேந்தவையள். பெண்களுக்கு அவ்வளவு freedom கொடுக்கமாட் டினம். அவையோடு சேந்தால் எங்களுக்கு ஒரு நன்மையும் வராது. பழையபடி அடுப்பூதத்தான் கொண்டுபோவான்கள்.

வச்சிர. அப்பிடியெண்டால் சமசமாசப் பாட்டிக் (Sama-samaja Party) காறர் கொம்மியூனிஸ்ட் பாட்டிக் (Communist Party) காறர் பெண்கள் விடுதலைக் காகப் பாடுபடுபவர்கள். அதனுலே உங்கடை சங்கம் ஏதாவது இடதுசாரிப்பக்கம் சேந்துவிடுமோ? நல்லாக நினைச்சுக்கொள்ளவேணும். நான் வலது சாரிப்பக்கமும் அல்ல இடதுசாரிப்பக்கமும் அல்ல; இடையிலே ஒருபாட்டியையும் சேராது நிற்பவன். ஆனுல் நானும் ஒரு சோசலிஸ்ட் (Socialist), பொதுமக்களுக்காகப் பாடுபடுபவன்.

சுந்தர. சீச்சீ, ஒண்டுக்கும் பயப்பிடவேண்டாம். எங்கடை சங்கம் அப்பிடி ஒரு பாட்டியையும் சேரமாட்டுது. அதுக்கெல்லாம் நாங்கள் இருக்கிறம், பாத்துக் கொள்ளுவம். எங்களையும் மீறி எதுவும் நடக்கிறதே எங்கள் சங்கத்திலை ?

வச்சிர. அப்ப உங்கடை சங்கத்து வோட்டு எல்லாம் நிச்சயந் தானே.

வசந்த. நிச்சயம், அதுக்கு ஒரு ஐமிச்சமும் இல்லை.

சுந்தர. எங்கடை சங்கம் உங்கடை பக்கந்தான். அதின்ரை வோட்டு வேறை ஒருத்தருக்கும் போகாது.

வச்சிர. அப்பிடி எண்டால் சரி, நான் போட்டுவாறன். (எழுந்துபோகின்ருர்.)

வசந்த. என்ன சுந்தரி, பாக்கிறமாதிரியிலை நீ அப்புக்காத்தர் மேல் மெத்தத் தயவாக இருக்கிருய் !

சுந்தர. வேறையொண்டும் இல்லை. கெட்டிக்காறன், ஒரு இலட்சிய புருஷன். எங்கடை சங்கத்துக்காக மிகவும் பாடுபடுகிறவர். அப்படிப்பட்டவருக்கு நாங்களும் வேண்டிய உதவிசெய்து வைக்கத்தானேவேணும்.

வசந்த. அதோடை அவர் ஒரு charming man ; அப்பிடித் தானே ?

சுந்தர. இருந்தாலும் இருக்கலாம்.

வசந்த. ஏனப்பிடிச் சொல்ருய் ? ஏனப்பா எனக்கு ஒளிக்கிருய் ? அவர் உன்மேல் மையல்கொண்டு இருக்கிருர் எண்டு சொன்னல் என்ன ? நான் அறியக் குடாதோ ? நானும் உனக்கு ஒரு friend தானே.

சுந்தர. ஏனப்படிச் சொல்ருய் ?

வசந்த. அல்ல, உன்னைப்போலப் படித்தபொம்பிளைக்கு அவரைப்போலக் கெட்டிக்காற ஆள்தான் வேணும்.

அவரும் உன்னை அடிக்கடி வந்து பாக்கிருர். அவரைக் கண்டவுடனே உன்னைப் பாத்தாலும் ஒருமாதிரி இருக்கு.

சுந்தர. என்னவோ எனக்கு ஒண்டுந் தெரியஇல்லை; நீதான் இப்படிச் சொல்ருய். ஆனல் ஆண்கள் வேஷக்காறர் எண்டு மாதர் முன்னேற்றச் சங்கத்திலே நிறைவேற்றிய பிரேரணை ஒண்டு இருக்கிறது உனக்குத் தெரியுந் தானே ?

வசந்த. அது ஒருபுறம் இருக்கட்டும். சீவியத்திலே உண்மையாக நடப்பதையெல்லோ பாத்துக்கொள்ளவேணும். உந்தப் பிரேரணை எல்லாம் சங்கத்திலே எல்லோ. வாறதை விடக்குடாது. Any-how I wish you the best of luck.

# உறுப்பு II

## களம் 1

இடம்: நாகநாடு, நாகபுரி, குமாரநாகர் வீடு.

குமாரநாகர் ஒரு சாய்வு நாற்காலியில் படுத்திருக்கிறார். அவர்தலையில் ஒருதுண்டு கட்டி இருக்கின்றது. அவருக்கு அருகில் அங்கதநாகர் ஒரு கட்டிலில் இருக்கின்றார்.

**அங்கத.** என்ன தோளரே, இந்தப் புண்ணுக்கு என்ன செய்தாய்? மருந்து கட்டினியோ? அல்லது சும்மா வெறும் சீலையைக் கட்டி இருக்கிறியோ?

**குமார.** இல்லை, இல்லை. காத்தாலைதான் அம்மாவெட்டைச் சொல்லி முருங்கைஇலையும் மிளகும் இடிப்பிச்சு வைச்சுக் கட்டியிருக்கிறன். பொல்லாத எரிவாய்க் கிடக்கு. இரா முழுக்க நித்திரைஇல்லை.

**அங்கத.** ஆர் காணும் உப்பிடிக் கல்லாலை எறிஞ்சவங்கள்? ஆரும் உங்கடை கொம்மியூனிஸ்ட் பாட்டிக்கு மாறானவங்களோ? அல்லது உங்கடை அபேட்சகர் அரு. முத்துநாகருக்கு எதிரானவங்களோ?

**குமார.** இது எறிஞ்சது பாட்டி கிட்டி இல்லைக்காணும். பக்கத்து வடலிக் கூடலுக்காலை வந்தது ஐஞ்சாறு கல்லு. ஆரோ வம்புகள் இந்தக் கூட்டத்தைக் கலைக்கச்செய்தவேலை காணும். செயர்மன் (chairman) உக்குப் பக்கத்திலே இருந்த உலாந்தரிலே மளார்எண்டு ஒருகல்லு விழுந்தது. சிமினிக்கண்ணாடி பறந்தடிக்கும் எண்டு குனிஞ்சன்; விழுந்தது மற்றக் கல்லு என்ரை மண்டையிலை.

அங்கத. அப்ப நீயென்ன செய்துகொண்டிருந்தனி?

குமார. அப்பதான் நாகர் காங்கிரசுக்காறரைத் தவிடுபொடியாத் தாக்கிப் பேசிக்கொண்டிருந்தன். சாய், கெடுத்துவிட்டான்களே.

அங்கத. பாத்தியே, எத்தினைமுறை சொன்னன் உந்தத் தெரிவுக் கூட்டங்களுக்குப் போகாதை போகாதை எண்டு. இப்ப வேண்டி முடிஞ்சியே. சும்மா சட்டம்பி வேலையைப் பாத்துக்கொண்டிருக்கிற எங்களுக்கு ஏன் உந்த ஊர்த் தொளவாரத்தை?

குமார. நீ உப்பிடிச் சொல்லிருய். எனக்குத் தலைஇடி தாங்க முடியஇல்லை.

அங்கத. என்னகாணும் இந்தச் சின்னப்புண்ணுக்கு உந்தப் பாடுபடுகிருய்? உப்பிடியான ஆக்கள்தானே revolution கொண்டாறது? சும்மா சத்தம் போடிறது தான். என்ன, குலைக்கிறநாயும் கடிக்கிறதே?

குமார. அப்பிடிஎண்டால் பாப்பமே உங்கடை நாகர் காங்கிரசை? காத்திலை விடுறமோ இல்லையோ எண்டு பாருங்கோவன். அதென்ன, உங்களுக்கை ஒற்றுமை இருந்தால் எல்லோ? கண்டறியாத காங்கிரஸ். இந்தத் தெங்கந்தீவிலை இருக்கிற அவுணர், தேவர், நாகர், கந்தருவர், கின்னரர் என்ற அஞ்சு மக்கட் பிரிவிலை, நாகர் எண்டு இருக்கிறது ஆக எட்டில் ஒண்டு. அப்பிடி இருந்தும், நாகர் காங்கிரசுக்கையும் ஒத்துழைப்புக் கட்சியாம், பிரிவினைக் கட்சியாம். என் உந்தப் புலுடா எல்லாம் விடுறியள். உங்கடை உந்த நாகர் காங்கிரசைத் தொடங்கினது உங்கடை தலைவர் முன்னேற்றத்துக்கெல்லோ? பின்னைப் பொது சனங்களின்ரை நன்மைக்காகவே? இந்தத் தெங்கந்

தீவிலை நாசனல் பாட்டி ஒண்டிருக்கெண்டு தெரியும் எல்லே? இந்தத் தெங்கந்தீவிலை உள்ள சனங்களில் பெருந்தொகையானவர்கள் அவுணர்கள். அதனுல் பாளிமேந்திலை (parliament) அவுணர் மெம்பேசு (members) தான் கூடிவிடுவான்கள். அதைப் பாத்துப்போட்டு, தங்களுக்கு ஒரு பட்டம் பதவி ஒண்டும் வாராதுஎண்டு நினைச்சுத்தான், இந்த நாகர் காங்கிரசை உங்கள் தலைவர்கள் தொடக்கினது. ஆனுல் நாசனல் பாட்டிக்காறரிலை உங்கடை பருப்பு வேகயில்லை. அப்ப காங்கிரசிலை ஒரு பகுதிக்காறர் பாத்தான்கள் நாசனல் பாட்டியோடை சேராமல் பிறிஞ்சு நிண்டால் சாயம் களண்டுபோடும் எண்டு. பின்னை, அவங்களோடை ஒத்துளைச்சால் நாகருக்கு ஏதோ பெரிய லாபம் வந்துவிடுமெண்டு எண்ணிக்கொண்டு மெதுவாக வெக்கத்தைக் கக்கத்துக்கை வைச்சுக் கொண்டு மற்றப் பாட்டிக்குத் தெரியாமல்ப் போய், பளியோ முறையோஎண்டு நாசனல் பாட்டியின்ரை காலிலை விளுந்தான்கள். இது மற்றப் பாட்டிக்குக் கோவம். இவங்கள் தங்களை மற்றவங்கள் விளையாடிப் போட்டான்கள் எண்டு நினைச்சுக்கொண்டு சாதிப்புனிதம் மொளிப்புனிதம் என்னும் வகுப்புவாதங்களைக் கொதிப்பிச்சுக்கொண்டு திரியினம். நாகருக்குப் பிறிம்பான இராச்சியம் வேணுமாம். அப்பிடிப் பிறிம்பான இராச்சியம் வந்தால் குட்டிக் கவுணர், மந்திரி ஆகலாம் எண்டு கணக்கண்டுகொண்டு தான் உந்த வேலைஎல்லாம். என்ன எங்களுக்குத் தெரியாதே? உதுதான் உங்கடை நாகர் காங்கிரசு.

அங்கத. என்னகாணும் கனக்கப் பேசிறீர். உங்கடை இடதுசாரிக் கட்சி எல்லாம் திறமோ? அவையின்ரை

பொட்டுக்கேடு எங்களுக்குத் தெரியாதோ? இந்த நாளையிலே எல்லா மண்டலங்களிலேயும் இடதுசாரிக் கட்சியாக இருப்பதுதான் பாஷன் (fashion). உதுக்காக ஒரு கட்சியைத் தொடங்கிறது. அதுக்கு ஒரு புதுப்பேர் வைக்கிறது. உண்மையாக உந்தக் கட்சியள் எல்லாம் ஏழைபேதையளை ஏமாத்தத்தான். அதோடை அந்தச் சனங்களின்ரை பெலத்தைக் கொண்டு தாங்கள் லீடேர்ஸ் (leaders) ஆக வாறது தான், ஒவ்வொருதற்றை உண்மையான நோக்கம்.

அப்பொழுது பால நாகரும் புலிக்குட்டி நாகருங் குமார நாகரை வருத்தம் பார்க்க வருகின்றனர்.

அங்கத. (தனது இருக்கையைவிட்டு எழுந்து சில கதிரைகளை இழுத்துவிட்டு) இருங்கோவன். இண்டைக்கு என்ன இவடத்தோடை?

புலிக். இல்லை இல்லை, கொம்றேட் குமாரநாகர் கல்லெறி வேண்டிப்போட்டாராம். அதுதான் அவங்கடை எறி இனிச்சுதோ உறைச்சுதோ எண்டு கேக்கலாமெண்டு வந்தம்.

பாலநா. மெய்யே தோளா? காயம் என்ன வாறே? ஒருதருக்கும் காட்டயில்லையே? ஆரும் இடாக்குத்தருக்குக் காட்டினல் நல்லது.

குமார. (புலிக்குட்டி நாகரைப் பார்த்து) ஏன் காணும் உங்கடை நாசனல் பாட்டியும் இந்தச் சீற்றுக்குக் கொண்டெஸ்ற் பண்ணச்சொல்லி ஆரையோ தட்டி எழுப்பி விட்டிருக்காம்; ஆர் அந்த ஆசாமி?

பாலநா. அந்தக் கிரவுஞ்சபுரியிலை இருக்கிற முகாந்திரம் இளநாகர்தான்.

புலிக். என்ன ஒருவிதமாகத் தட்டிஎளுப்பிற கதை பேசிறீர்? நாங்கள் நெடுகத்தானே அவரைப் போட அடுக்குப் பண்ணி இருந்தநாங்கள்.

பாலநா. உங்கடை அடுக்குகள் ஒண்டும் இஞ்சை ஆடாது காணும். முதலாளி வகுப்பை முறியடிக்கத்தானே கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறம். ஏளை எளியது கள் நெற்றி வேர்வை நிலத்திலை சொட்டச் சொட்ட உளைச்சுக் குடுக்கிறதை நல்லாய்த் திண்டு திண்டு கொளுத்துத் திமிர் பிடிச்சுக்கொண்டு இன்னும் அதுகளைக் காலுக்கைபோட வளி தேடிறியள். இந்த முதலாளி வகுப்பை அடக்கி ஒடுக்கித் தொளிலாள ராகிய நாம் இந்த முறை சீற்று (seat) எல்லாத்தையும் பிடிக்கிறமோ இல்லையோ எண்டு பார்.

அங்கத. அப்பிடி எண்டால் எத்தனை பேர்காணும் இந்தச் சீற்றுக்குக் கொண்டெஸ்ற் பண்றது காணும்?

குமார. நாகர் காங்கிரசிலை இரண்டுபேர், இடதுசாரியிலை மூண்டுபேர், நாசனல்பாட்டி ஒண்டு; அப்ப எல்லா மாக ஆறு.

அங்கத. நீங்கள் ஒண்டை விட்டிட்டியள்! அப்புக்காத்தர் வச்சிரநாகர் இண்டிப்பெண்டன்ற் சோசலிஸ்ற் (Independent Socialist) ஆக முன்வந்திருக்கிறர். நீங்கள் எல்லாரும் குத்துப்பட அவன் வோட்டு எல்லாத்தையும் அடிச்சுக்கொண்டுபோடுவன். அதோடை மாதர் சங்கம் அவன்ரை கையுக்கை. அதிலே சரியான வோட்டு இருக்கெண்டு பாத்துக்கொள். (குமார நாகரைப் பார்த்து) ஏன், உன்ரை கொம்மான் முடி நாகர்தானே அவற்றை கையாள்—உன்ரை மச்சாள் பரிமளத்தின்ரை தேப்பன்? அவருக்கு நல்லாய்ப் பந்தப்பிடிச்சுத்திரியிறராம்?

புலிக். நீங்கள் என்னத்தைச் சொன்னாலும் கிளக்கை காலிக் கிற சூரியன் மேற்கை காலிச்சாலும் (நெஞ்சிலே தட்டி) இறுதி வெற்றி நாசனல் பாட்டிக்குத்தான்.

பாலநா. நீங்கள் எங்கைகாணும் வெற்றி எடுக்கப் போறியள்? அப்பிடித்தான் தற்செயலாய் வெண்டாலும் பின்னை லேசிலை விடப்போறமோ? We will stir the masses into direct action and paralyse the machinery of government. The strike will rise wave after wave and we will kick the governor into the sea.

அப்பொழுது புதினத்தாள் கொடுக்கும் பையன் ஒரு வன் புதினத்தாள் ஒன்றை அங்கு கொண்டுவந்து வைத்துவிட்டுப் போகின்ருன்.

புலிக். என்ன, நீங்கள் strike கும் revolution உம் போட் டுத்தான் விடுவியளோ? கவுணர் எங்கடை பாட்டி யெண்டு தெரியாதோ? நீங்கள் strike போட்டால் அதை என்னமாதிரி அடக்கிறம் எண்டு பார். பொலி சுக்காறரைக் கொண்டுவந்து இரண்டு சத்தவெடி போட்டால்தான் தெரியும் உங்கடை வேலை. மூலைக்கு மூலை ஓடி ஒளிச்சிடுவியள்.

பாலநா. உந்தமாதிரி எங்களை எண்ணிக்கொள்ளவேண்டாம். எங்கள் பாட்டிக்காறர் எல்லாம் பெரும் தியாகிகள். தொளிலாளிகளுக்காகப் பாடுபடும் அஞ்சா நெஞ்சம் படைத்த வீர சிங்கங்கள். தலைகள் தரையில் உருண் டாலும் குண்டுகள் நெஞ்சிற் பாய்ந்தாலும் முன் வைத்த காலைப் பின்வையாதவர்கள். வெற்றிகரமாக முன்னேறுவோம்.

புலிக். ஏன்காணும் உளறுகிறீர்? உங்கடை பாட்டி மாத்திரம் அல்ல, மற்ற எந்தப் பாட்டியாவது தலை நிமித்திற

தைப் பாத்துக்கொள்ளுவம். எட மடைப்பயல் களே, (அங்கதநாகருக்கும் பாலநாகருக்கும் தனது கையைக் காட்டி) உங்களுக்கை ஒற்றுமை இல்லை, உலக ஒற்றுமைக்கும் தொழிலாளர் நன்மைக்கும் பாடுபடுவது எப்பிடி ?

அதைக்கேட்டவுடன் அங்கதநாகர் கையை உருவு கிறார். பாலநாகர் கையைப் பொத்திக்கொண்டு புலிக் குட்டிநாகருக்குக் குத்தப்போகின்றார். அப்பொழுது புலிக்குட்டிநாகர் அவரின் சிவத்த டையைப் (tie) பிடிக்கிறார். குமாரநாகர் எழுந்து இருவரையும் பிடித்து விலக்கி விடுகிறார். அதன்பின் எல்லாரும் சிறிதுநேரம் பேசாது இருக்கின்றனர்.

குமார. (புதினத்தைப் பார்த்துவிட்டு) ஏனப்பா பாலநாகரே, கொம்மான்பாடு தேயிலைத் தோட்டத்திலை பெரிய திண்டாட்டம்போலை இருக்கு. அங்கை வேலைசெய்த சம்புத்தீவுக் கூலியாட்கள் எல்லாம் சம்பளத்திலை ஒருகாசு கூட்டித் தரச்சொல்லிக் கேட்டான்களாம். இவர் மறுத்தாராம். உடனே strike போட்டான் களாம். இவற்றை காறுக்கும் கல்லாலை எறிஞ்சு போட்டான்களாம். அதிலை போன எல்லாரும் தப்பிவிட்டினமாம். உன்ரை மச்சானுக்குத்தானும் காயம். ஆசுப்பத்திரிக்குக் கொண்டுபோயிருக்கின மாம்.

பால. (ஆத்திரத்துடன்) மெய்தானே? இந்தச் சம்புத்தீவுப் பயல்கள் எல்லாம் உப்பிடித்தான். நன்றிகெட்ட நாயள். அவற்றை சோத்தைத் திண்டுபோட்டு அவரிலைதான் சருவிறுங்கள். என்ன, பொலிஸைச் கூப்பிட இல்லையாமோ ?

புலிக். என்ன, பெரிசாகத் தொளிலாளருக்காகப் பேசினுய்? கொம்மான்ரை காசிலே கைவைச்சான்கள், மச்சாளுக்குக் கல்லெறிஞ்சுபோட்டான்கள் எண்டவுடனே தொளிலாளருக்காகப் பாடுபடுவது எல்லாம் பறந்துபோச்சு. சொல்லிறது ஒண்டு செய்யிறது ஒண்டு. பொலிஸைக் கூப்பிடட்டுமாம்! பொலிசை!!

பால (ஆத்திரங்கொண்டு) என்ன ஒருவிதமாகப் பேசிறீர், ஓய், புலியரே!

புலிக் பேசினுல் என்ன செய்வீர்? (அடிக்கப்போகிறுர்.— திரை.)

## களம் 2

### இடம்: நாகநாடு, நாகபுரி முடிநாகர் வீடு

காளிங்கநாகர் ஒரு கதிரையில் இருக்கின்றுர்.

முடிநா. (கையில் ஒரு தோப்பியுடன் உலாத்திக்கொண்டு) என்ன பிறக்கிருசியார், இராத்திரி அப்புக்காத்தர் நாகபுரி தெற்குவட்டாரப்பக்கம் போனவரே? இந்தத் தெரிவு விஷயத்திலே மிச்சம் கடுமையாய் நிக்கிறுன்கள்போலே. நானும் தற்செயலாய் இராத்திரி புல்லுக்கடையுக்கை பட்டைமூலேப் பிரம்புநாகரைச் சந்திச்சன். அப்ப, அவரெட்டை அந்தப் பக்கத்து ஆக்கள் எப்பிடியெண்டு தட்டிப்பாத்தன். அவர் கதைச்சமாதிரியிலே அவங்கள் பிரிவினைக்கட்சிப் பக்கம் நிக்கிறுன்கள்போலே. பிறகு, நானும் அப்புக்காத்தரைப்பற்றிச் சொன்னன். அந்தாளும் ஒரு மாதிரி ஒத்துக்கொண்டுது. அவற்றை கையுக்கை ஒரு நானூறு வோட்டு இருக்குப் பாருங்கோ. ஏதோ

தன்னாலே இயண்டதைச் செய்யிறன் எண்டு சொல்லிப்போட்டுப் போகுது.

**காளிங்.** ஓகோ அப்பிடியோ சங்கதி? எல்லாம் நல்லதுக்குத் தான், பாருங்கோ. அதுதான் போகுது. உதென்ன உந்தக் கடுதாசி? ஏதோ வளக்குக் கொப்பிபோலே கிடக்கு.

**முடிநா.** அதுதான் உந்தக் கார் பிடிபட்ட வளக்குக்கொப்பி. நீங்க வரமுந்திக் கொஞ்சம் பாத்துக்கொண்டு இருந்தன்.

**காளிங்.** அதுதான் இப்ப. உப்பிடி எத்தினை உங்கடைவளக்குகள் எங்கடை கையுக்கை வந்திட்டுப்போனது? உதெல்லாம் பறக்கவிட்டிடுவம். அப்புக்காத்தரும் (நெஞ்சிலே தட்டி) நானும் இருக்கையிக்கை உதுக்கும் யோசிக்கிறதே? அதுதான் சில்லறைக் கதை. அது இருக்க, நான் உங்களிட்டை ஒரு பெரிய அலுவலாய் வந்திருக்கிறன், பாருங்கோ.

**முடிநா.** என்ன அப்பிடிப் பெரிய அலுவல்? சொல்லுங்கோவன்.

**காளிங்.** வேறை ஒண்டும் இல்லைப் பாருங்கோ. சும்மா ஒருக்கா இப்பிடி ....

**முடிநா.** ஓகோ, அப்புக்காத்தர் கேட்ட கைமாத்துக்கடனைப் பற்றிக் கேட்கவந்தனீங்களோ? என்ன, அவருக்கும் எடுத்துக்குடுக்காமல் விடுவனே? அதுக்கும் ஒரு தடையே, பாருங்கோ. ஆனால் ஒண்டு, அவர் கேட்ட பத்துறுவாயிலே ஒரு நாலுறுவாத்தான் இப்ப வசதியாய்க் கிடக்கு.

**காளிங்.** ஓமோம், இப்ப நாலாயிரம் போதும். பாருங்கோ. பிறகு, மற்றதை ஒரு அஞ்சு பத்து நாளையிலே எடுத்துக் குடுக்கலாம்.

முடிநா. ஆனுல் ஒரு சங்கதி. வட்டிதான் கொஞ்சம் கூடிப் போச்சு. செட்டிவட்டி கேக்கிருன்கள். அதுக்கு அப்புக்காத்தர் என்ன சொல்லிருரோ தெரியயில்லே.

காளிங். அவர் என்ன சொல்லிறது. உந்தச் சீமானுக்கும் உது ஒரு காசே. உதுதான் கதை. உதைப்பற்றி யல்ல நான் இஞ்சை பேசவந்தது.

முடிநா. பின்னே வேறைஎன்ன, பாருங்கோ?

காளிங். (அங்கும் இங்கும் பார்த்துவிட்டு) இஞ்சாலே எப்பன் இப்பிடி வாருங்கோ. அக்கம்பக்கத்திலே ஒருவரும் இல்லேத்தானே?

முடிநா. இல்லே இல்லே, சொல்லுங்கோ பயப்பிடாமல்.

காளிங். அப்பிடி...ஒண்டும்...இல்லேப்...பாருங்கோ. இப்ப மத்தியானவேளே. இந்திரமுகூத்தம். ஆகையால் நான் பேசிற விஷயத்துக்குச் சரியான நேரம்.

முடிநா. என்ன அது? சொல்லுங்கோவன். இண்டைக்கு ஒரு கலியாண நாள்தான். ஆ அ அப்பிடி என்ன பாரதூரமான விஷயம்?

காளிங். இந்த........ அதென்ன...ஒ...ண்...டும் இல்லேப் பாருங்கோ. இந்...த...ஆ...உங்கடை மகள்ப் பிள்ளே இருக்குதே......

முடிநா. (நெற்றியைச் சுளித்து) ஓ, ஓ.

காளிங். அவவுக்கு ஏதும் பேசிக்கீசி முற்ருய்விட்டுதே?

முடிநா. இல்லேப் பாருங்கோ. இன்னும் ஒரு பேச்சுக்காலும் இல்லே. உங்கினே உள்ள சில்லறையள் நானே நீயோ எண்டு ஆக்கபௌட்டைச் சொல்லிவிட்டுப் பாக்கினம் தான். ஆனுல் நான் ஒண்டுக்கும் இடங்குடுக்கயில்லே. ஏன் கேக்கிறியள்?

காளிங் இல்லே... இல்லேப் பா...ருங்...கோ. ஒரு நல்ல இடத்து ஆள் ஒண்டு அந்தப் பிள்ளேயை எடுத்தால்

நல்லது எண்டு யோசிக்குது. அதுக்கு இடங்குடுப் பியளோ என்னவோ எண்டுதான் கேட்டுப்பாத் தனுன், பாருங்கோ. ஆமான இடம். ஆனபடியால்த் தான் வாய்வைக்கிறன், பாருங்கோ.

முடிநா. ஒளிக்காமச் சொல்லுங்கோ. தாய்பிள்ளைபோலை பள கின எங்களுக்கிள்ளை என்ன ஒளிப்பு மறைப்பு? திறந்து சொல்லுங்கோ.

காளிங். வேறை ஒருத்தரையும்பற்றி இல்லைப் பாருங்கோ; எங்கடை கையுக்கை இருக்கிற ஆளைப்பற்றித்தான். வெளியாய்ச் சொல்லிறன் உங்களுக்கு. இவர்தான் எங்கடை அப்புக்காத்தர் இருக்கிறூரே, அவர் நான் அறிஞ்ச அளவிலை ஒருவிதமாகக் கேட்டுப்பாத்தால் தட்டமாட்டார்போலை இருக்கு. நான் அதை ஒருக்கா அவருக்கு நேர்முகமாகப் போட்டுப் பாக்கட்டே?

முடிநா. (தலையைச் சொறிந்துகொண்டு) நீங்கள் சொல்லிறது ஒண்டு இருக்குத்தான். அதைப்பற்றி ஒருக்கா வீட் டுக்காறரையும் கேக்கவேணும், பாருங்கோ. எனக் கும் வேறை சோலியளும் இருக்கு. எண்டாலும் இதைப்பற்றி யோசிக்காமல் விடுறதும் சரியில்லை. பிள்ளையின்ரை நன்மையும் பாக்கத்தான் வேணும். இப்ப அப்புக்காத்தருக்கும் ஒரு நெருக்கடியான நேரம். எப்பிடி நேரம்வரும்? எண்டாலும் நீங் களும் உப்பிடிச் சொல்லிறியள். இதுதான் எனக்கு யோசினையாய் இருக்கு.

காளிங். சச்சாய், அதுஎல்லாம் கிடக்கட்டும். உங்களுக்கு விருப்பமோ? சொல்லுங்கோ, மற்றது எல்லாம் என்னுடை, பாருங்கோ.

முடி.நா என்ன சொல்லிறியள். உங்களுக்குத் தெரியாத சங்கதியும் என்னெட்டை இருக்கோ? இது விஷயத்தை உங்களோடை விட்டிடிறன். ஏதோ யோசிச்சுப் பாத்துச் செய்யுங்கோவன்.

காளிங். அப்பிடியெண்டாச் சரி. முழுக்க முற்றுச்சுதெண்டு வைச்சுக்கொள்ளுங்கோ. (நெஞ்சிலே தட்டி) என்ன, காளிங்கன் கைபோடிறதும் ஏதோ பிழைக்கிறதே? பிறகு வந்து காணிறன்; இனி என்ன முற்றுத் தானே? சரி, நான் வாறன், பாருங்கோ. பட்டை மூலையுக்கை அப்புக்காத்தற்றை தெரிவுக்கூட்டம் இண்டைக்கு. அதுக்கு வேண்டிய ஆயித்தஞ் செய்ய வேணும். அப்ப நான் நடக்கட்டே?

முடி.நா ஓம் ஓம், வாருங்கோ. மெத்தச் சந்தோஷம். அதோடை என்ரை வளக்கையுங் கவனிச்சுக்கொள்ளுங்கோ.

காளிங்கநாகர் போகின்றார்.

முடி.நா. (ஏதோ எண்ணத்தில் ஆழ்ந்தவராய்க் குறுக்கும் மறுக்கும் உலாவிக்கொண்டு) இஞ்சார், இஞ்சார் எல்லே.

(உள்ளுக்கு) என்னது? சொல்லுங்கோவன்.

முடி.நா இஞ்சை ஒருக்கா வந்திட்டுப்போ.

அன்ன (முகத்தைத் துடைத்துக்கொண்டு அவருக்குமுன் வந்து) என்னத்துக்குக் கூப்பிட்டியள்?

முடி.நா மெய்யே, கேட்டியே சங்கதி?

அன்ன. என்னது? சொல்லுங்கோவன்.

முடி.நா இஞ்சை பிறக்கிறாசியார் வந்து, பிள்ளையின்ரை அலுவலாக ஒரு வியளம் பேசிப்போட்டுப் போறார்.

அன்ன என்னவாம் அது?

முடி நா. இப்பிடி அப்புக்காத்து வச்சிரநாகருக்கு அவளைக் கட்டிக்குடுத்தால் என்ன? உங்கடை எண்ணம் என்ன எண்டு கேட்டார்.

அன்ன. அதுக்கு நீங்கள் என்ன சொன்னியள் ?

முடி நா. வலியவாற சீதேவியைக் காலாலை தள்ளிறதே? ஒருக்கா உசாவிப்பாருங்கோ எண்டு அவரெட்டைச் சொல்லிப்போட்டன். இதுக்கு நீ என்ன சொல் விருய்?

அன்ன. ஓகோ, அப்பிடியோ சங்கதி? அதுதான் அண்டைக்கு குடக்கிநாகக் கட்டாடி பெண்டிலும் இஞ்சை வந்தாப்பேலை என்னைக் கேட்டது.

முடி நா. என்ன, என்ன, ஆர்? குடக்கிநாகக் கட்டாடி பெண்டில் கேட்டாளோ? அவளுக்கு என்னெண்டு தெரியும்?

அன்ன. உப்பிடி அப்புக்காத்தர் உங்கடை வீட்டை வாறவராம். உங்கடை பிள்ளையோடை கதைக்கிறதுமாம். அந்தப் பிள்ளையைக் கட்டினல் என்ன எண்டு பிறக்கிருசியாரைக் கேட்டாராம். பிறக்கிருசியார் பெண்சாதி இந்தச் சங்கதியைப் பிடிச்சுக் குடக்கிக்கட்டாடி பெண்டிலுக்குச் சொன்னதாம். அவள் இஞ்சை வந்து சொல்லயுக்கை எனக்குக் கதை எப்பனும் விளங்கயில்லை. சரி சரி, (தலைஅசைத்து) இப்பதானே காரியம் விளங்கிச்சுது.

முடி நா. அதுதான் போகுது ஊருக்கதை. ஆர் குத்தியும் அரிசியாகவேணும் எங்களுக்கு.

அன்ன. ஓ, பின்னை விருப்பமெண்டாச் செய்யுங்கோவன். அவளையும் நெடுக வைச்சுக்கொண்டிருக்கப்பிடாது. இவடத்துக்கை சரியான மாப்பிளையும் இல்லைத் தானே. அண்ணன்ரை பொடியன் குமாரனையும் எத்தினைநாளைக்கெண்டு காத்துக்கொண்டிருக்கிறது?

முடிநா. சீச்சீ, என்ன அவனையும் எடுக்கிறதே. அவளின்ரை நிலைஎன்ன? அவன்ரை நிலைஎன்ன? சும்மா, பள்ளர் பறையர் குறவர் எல்லாரும் ஒண்டெண்டு சொல்லிக் கொண்டு அவங்களோடை கூடிக் கொண்டாடிறான். தொளிலாளர் பாட்டாளிமக்கள் எண்டெல்லாம் கூட்டம்வளிய என்னென்னவோ புசத்திக்கொண்டு திரியிறான். உவனுக்குக் கட்டிக்குடுத்தால் பிள்ளை தெருவிலைதான் அலையவேண்டிவரும். இந்தநாளையுப் பொடியளின்ரை வேலை உப்பிடித்தான். உந்தக் களுதை ஆனமானது எண்டால் எனக்கேன் இந்தக் கேடு?

அன்ன. பீ. ஏ. சோதினை எடுத்திருக்கிறான்தானே. சோதினை குடுப்பானோ என்னவோ தெரியஇல்லை?

முடிநா. உவன் எங்கை குடுக்கிறது. கூட்டம்வளிய சத்தம் போட்டுக்கொண்டு திரியிறவங்கள் என்னெண்டு சோதினை குடுக்கிறது? ஒரு இடத்திலை ஆறத்தேற இருந்து படிச்சால்எல்லோ சோதினை குடுக்கலாம்? கூட்டங்களிலை எளும்பிக் குளறிப்போட்டு வீட்டிலை வந்து சாப்பிட்டிட்டுப் படுக்கிறவன்களுக்கு என்ன சோதினை?

## களம் 3

இடம்: நாகநாடு, நாகபுரி, மாணிக்கதேவர் காப்பிக்கிளப்பு.

மாணிக்கதேவர் மேசையில் காப்பி ஆற்றிக்கொண்டு இருக்கிறார். பாலநாகர் ஒரு மேசைக்கருகில் இருக்கிறார்.

மாணிக். (காப்பியைப் பாலநாகர் முன் வைத்துவிட்டு) என்ன சார், சுகந்தானே? கனநாளாய் இந்தப் பக்கம் காணயில்லை. ஆருக்காம் எலெச்சனிலை சான்ஸ் கூட?

பாலநா. வேறை ஆருக்கு? எங்கடை கம்மியூனிஸ்ட் பாட்டிக்குத்தான்.

மாணிக். என்ன சார், அப்புக்காத்தர் வச்சிரநாகர் இருக்காரே, அவருக்குத்தான் சான்ஸ் கூட எண்டு சொல்லிருங்க. இவடத்துப் பெரியவாள் எல்லாம் அவாள் கையுக்கைதானுமே. அவாள் நாமினேசன் பேப்பருக்கும் முடிநாகர்தானுமே கையெழுத்துப் போட்டது.

பாலநா. எந்தப் பெரிய ஆக்கள் வேலை செய்தாலும் எங்களுக்குத்தான் இறுதி வெற்றி. அரு. முத்துநாகர் இந்த எலெச்சனிலை வெல்லாட்டி என்ரை பேரை மாத்திப் போடிறன் பார்.

பாலநாகர் பேசிக்கொண்டு காப்பிகுடிக்கும்போது புலிக்குட்டி நாகர் வருகின்றார். புலிக்குட்டிநாகர் வழக்கம்போல் அவருக்குமுன்வரச் சிறிது ஐயம்உறுகின்றார். அதைக் கண்டுவிட்டு,

என்ன புலிக்குட்டியரே, வாரும் வாரும்; எட்டத்திலே இருக்கிறீர்; வாரும், இப்பிடி இரும். (தேவரை நோக்கி) தேவரவாள், இஞ்சாலை ஒரு கோப்பி கொண்டந்து குடுங்கோ.

மாணிக். ஆமாங்க சார்.

புலிக். எனக்கு எசன்சு காப்பியாகப் போடச்சொல்லுங்க, சாமி.

மாணிக். (உள்ளே பார்த்து) அடே யாரடா உள்ளே? ஒரு எசன்சு காப்பி போடுங்கடா. டிக்கக்சன் கொஞ்சம் நன்னுய்ப் போடு, ஜல்தி.

(உள்ளுக்கு) ஆமாங்க சாமி.

பாலநா. அதெல்லாம் சரி; உங்கடை வோட்டை ஆருக்குக் குடுக்கப்போறியள் சாமி?

புலிக். அது என்ன; அவர் நாசனல்பாட்டிக்குத்தான் குடுப்பர். தேவர்எல்லாம் பெரும்பான்மைக் கட்சியோடைதான் நிப்பார்கள். அவங்கள் தனிய நிக்க என்ன, நாகரைப்போலே ஏதும் மடையரே? அவுணர்ப் பாட்டியோடை சேர்ந்தால் அதுக்குத்தக்க நன்மை இருக்கும் எண்டு அவங்களுக்குத் தெரியும். அதினுலே நாசனல்பாட்டிக்குத்தான் அவங்கடை வோட்டு.

பாலநா. ஏன்காணும் அப்பிடிச் சொல்லிறீர்? நாசனல்பாட்டி எண்டால் அவுணர்பாட்டிதான். காங்கிரசுப்பாட்டி எண்டால் நாகர்பாட்டிதான். எங்கடை இடதுசாரிக் கட்சி இருக்கே, அதிலே அவுணரும் மெம்பர்தான். நாகரும் மெம்பர்தான். எங்கடை கட்சிதான் வகுப்புவாதமில்லாத பரந்தநோக்கம் உடைய கட்சி. உங்கடை பாட்டி எல்லாம் குறுகிய நோக்கம் உள்ள வகுப்புவாதக் கொந்தலுகள். ஆகையால் சாமி, புலிக்குட்டியார் பேச்சைக் கேளாதையுங்கோ. எங்கடை பாட்டிக்குத்தான் உங்கடை வோட்டைப் போடுங்கோ.

மாணிக். (காப்பியைக் கொண்டுவந்து வைத்துவிட்டு) என்னுங்க சார். நீங்க இரண்டாசாமிகளும் வீணுத்தான் சண்டை போடுறீங்க.

(இருவரும்) ஓகோ, காங்கிரஸ் பாட்டிக்குப் போடப் போறியளோ?

மாணிக். சும்மா போங்க சார். நான் ஒருபாட்டிக்கும் போடப் போறதில்லே.

பாலநா. நீங்கள் உங்களுடைய வாக்குரிமையைச் சரியான முறையிலே பாவிக்கவேண்டும். உங்கள் சுதந்திரம் உங்கள் பிறப்புரிமை.

மாணிக். (கையைக்காட்டி அமர்த்தி) ஆத்திரம் வேண்டா மையா, கேளுங்கள். எங்கள் சுதந்திரம் எங்கள் பிறப்புரிமைதான். ஆனால் வாக்குரிமை இருந்தால்த் தானே அதை நான் சரியானமுறையிலே பாவிக்கிறது? இங்கே பிசுனெசுக்காக (business) நாகநாட்டுக்கு வந்திருக்கும் தேவர் ஒருவருக்கும் வாக்குரிமைதர மறுத்துப்போட்டாங்க. அப்ப என்ன பண்ணிறது? சரி, அது இருக்க வச்சிரநாகருடைய சங்கதி எல்லாம் எப்பிடி இருக்கு? அவாள்பாடு பெரிய குருசந்திர யோகமாமே?

பாலநா. என்ன சாமி குருசந்திரயோகம்? அவர்தானே வெற்றி எடுக்கமாட்டார் எண்டு அப்பவே சொன்னேனே.

மாணிக். அதை அல்ல சார், நான் சொன்னது. இந்த எலெச்சனோடை ஒரு கலியாணமும் ஆப்பிடுதாமே அவருக்கு.

பாலநா. அதுதானே பளங்கதை. சுந்தரநாகியைத்தானே கட்டிருர். அதைப்பற்றி என்ன பேச்சு?

மாணிக். அதல்ல சார், நான்சொன்னது. வேறை ஒரு பெரிய இடத்திலே கட்டப்போருராமே?

பாலநா. சும்மா போங்க சாமி; நெடுகக்கூட உங்களுக்கு வேலே ஊர்வம்பு அளக்கிறதுதானே.

புலிக். மெய்தான் பாலநாகரே, தேவர் சொல்லுவதைப் பகிடி பண்ணுதை. அவர் சொல்லிறதிலே உண்மை இருக்குத்தான்.

பாலநா. ஏன் அப்படிச் சொல்லிருய்?

புலிச். இண்டைக்குக் காலமை என்ரை காதிலையும் விழுந் துது ஒரு கதை.

பாலநா. என்னது? என்னது?

புலிக். உப்பிடி, எங்கடை முடிநாகர் இருக்கிருரே; அவ ருடைய மகள் பரிமளநாகிக்குப் பேசி முற்ருய்ப் போச்சாம். எலெச்சன் முடிஞ்சதும் கலியாணம் நடக்கும் எண்டு உவடத்துக்கை கதைக்கிருன்கள்.

மாணிக். பாத்தியளே, நான் என்ன பேசினுலும் வம்பளக் கிறது எண்டு சொன்னீங்க?

பாலநா. என்ன புலிக்குட்டிநாகர், உண்மையாகத்தான் இருக் குமோ? சாய், அப்பிடி இருக்காது.

மாணிக். என்ன சார், நெருப்பில்லாமலும் புகையிறதா? ஏதா வது இருக்கத்தானே வேணும். சரி சார், காப்பி சாப்பிடுங்க. அங்கே பகோடா எண்ணைச்சட்டியிலே போடிருங்க; எப்பிடி இருக்குதெண்டு பாத்துக் கொண்டுவாறன்.

உள்ளே போகிருர்.

புலிக். என்ன பாலநாகரே! விளையாட்டு விளையாட்டாய் எல் லாம் பிளக்குதுபோலை இருக்கு. நம்மடை குமார நாகர்பாடு பெரிய மனக்கவலையாகத்தான் வரப் போகுது. சாய், உப்பிடி வரும் எண்டு நான் நினைக்க இல்லை. பாவம்.

பாலநா. சாய், குமாரநாகருக்கு இடி விழுந்ததுபோலை இருக் கும்.

புலிக். பின்னை என்ன, காத்திருந்தவன் பெண்டிலை நேத்து வந்தவன் கொண்டுபோனது போலை இருக்கும்

எல்லே? அப்ப, குமாரநாகருக்கு இந்தச் சங்கதி தெரியாதுபோலை இருக்கு. இதை இப்ப அவருக்குச் சொல்லிப்போடாதை.

பாலநா. மெய்தான், நல்லாய் விசாரிச்சுப்போட்டுத்தான் சொல்லவேணும். ஊர்க்கதையாய் இருந்தாலும் இருக்கலாம். ஏனெண்டால் சுந்தரநாகியோடை இந்தவிதமாகத் திரிஞ்சுபோட்டுத் திடீரென்று மனம் மாறுவரே? எப்ப பாத்தாலும் இரண்டு பேரும் நிகமும் சதையும்போலை திரிஞ்சினம். இதுக்கிடையிலை அவையளுக்கிள்ளை தெறிச்சுப்போச்சோ? என்ன காரணம்?

புலிக். ஆருக்குத் தெரியும்? எண்டாலும் சுந்தரநாகி பெரிய பாவம். ஆனால், உவவுக்கு உதுதான் வேணும். கொஞ்ச நாளைக்கிடையிலை என்ன பாடுபட்டுத் திரிஞ்சா. சும்மா கிடந்த பெண்டுகளை எல்லாம் தட்டி எளுப்பி உரு ஏத்திக்கொண்டு சம உரிமை இறவலூசன் (revolution) எல்லாம் பேசித் திரிஞ்சாவே; வந்து முடிஞ்சுது அவவுக்குத்தான்.

பாலநா. (மணிக்கூட்டைப் பார்த்து) நேரம் அஞ்சரையாய்ப் போச்சு. கூட்டத்துக்குப் போகவேணும்.

புலிக். என்ன கூட்டத்தைக் குளப்பத்தானே? கூட்டங் குளப்பிறதுதானே உங்கடை வேலை.

பாலநா. சும்மா பகிடியை விட்டிட்டு வா. நேரமாய்ப் போச்சு. இருவரும் எழும்புகின்றனர்.

## களம் 4

இடம் : நாகநாடு, நாகபுரி, குமாரநாகர் வீடு.

குமாரநாகர் ஒரு புத்தகத்தைப் பார்த்துக்கொண்டு இருக்கிறார். அதன்பின் எழும்பிப் புத்தகத்தைக் கொண்டுபோய் ஓர் இடத்தில் வைத்து, பின்னர் ஏதோ யோசித்துவிட்டுச் சோகமாகப் பாடிக்கொண்டு இருக்கிறார். அப்பொழுது பாலநாகர் வருகின்றார்.

பாலநா. (பாட்டு முடிந்தபின்னர்) என்ன தோளா! உனக்கும் சங்கதி வெளிச்சுப்போச்சோ? எனக்குத்தான் ஒரு விதமாய்த் தெரியும் எண்டு நினைச்சன்.

குமார. என்ன சங்கதி அது? வெளியாய்ச் சொல்லன்.

பாலநா. என்ன தெரியாததுபோலை பேசுகிறாய்? நீ இப்ப இருக்கிற தோற்றத்தைப் பாத்தாலோ, அல்லது பாட்டின்ரை சோகத்தைப் பாத்தாலோ ஆரும் சொல்லி விடுவினம்.

குமார. அதுதான் போகட்டுங் காணும்; விடு. உப்பிடி எத்தினை பொம்பிளை வரும், போகும். ஆயிரம் பொம்பிளையைப் பேசிறது; கடைசியாகக் கட்டிறது ஒண்டைத் தானே. ஆனால் இவள்தான் இப்படிச் செய்வாள் எண்டு நான் எண்ணியிருக்கயில்லை.

பாலநா. இவள் எண்டது ஆரை?

குமார. என்னுடைய அம்மானுடைய மகள் பரிமளநாகி தான்.

பாலநா. இந்தக் காலத்துப் பெட்டையளை நம்பிறதே காணும். உன்னைப்போலை மடையர் எல்லோ நம்பிறது.

குமார. நீ சொல்லிறதை முழுமுறையும் ஒத்துக்கொள்ளிறன். அது நான்விட்ட பிளை. சிறுவயதுதொடக்கம் என்ன மாதிரிப் பட்சமாக இருந்துவந்தாள். இப்ப, பெரிய இடத்திலை கலியாணம் ஒண்டு வந்தது. 'டக்'கெண்டு எல்லாம் மாறிப்போச்சு. சரிதான், வச்சிரநாகர் ஒரு பெரிய அப்புக்காத்து. எம்.பி. யாகவும் போறூர். நான் ஏளைச் சட்டம்பிதானே. என்னுடைய பெண்சாதி யாக இருப்பதிலும் பாக்க ஒரு எம். பி. யின்ரை பெண்சாதியாக இருப்பது பெரிய மகிமை எண்டு எண்ணிவிட்டாள்போலை.

பாலநா. ஓய், பெண்டுகள் காதல் அன்பு எண்டு சொல்லிறது எல்லாம் பெரிய பகட்டுக் காணும். உண்மையிலை அவளவை விரும்புவது பெருமை. ஆள் எப்பிடி இருந்தாலும் பறவாய் இல்லை. காசும் ஸ்ரேற்றசும் இருந்தால் போதும்.

குமார. நீ சொல்வதுதான் சரி.

பாலநா. சரி காணும், எங்கடை இறவலூசன் வரட்டுக்கும் பாத்துக் கொள்ளுவம். இந்தக் கப்பிற்றலிஸ்டுக ளிடம் இருக்கிற காசுகளை எல்லாம் புடுங்கி ஏளை எளியதுகளுக்குக் குடுக்கிறம்.

குமார. அதுதான் போகுது களுதை. அது இருக்க, எங்கடை கண்டிடேட்டின்ரை (candidate) சான்ஸ் எப்பிடி யெடாப்பா? ஊரிலை என்ன கதைக்கினம். இந்த முறை ஏதோ ஒருவிதமாகப் பாளிமேந்திலை கூடுத லாகச் சீற்றுப் பிடிச்சுப்போடவேணும். அடுத்த கூட்டத்திலை பாத்துக்கொள்ளுவம்.

அப்பொழுது சோதிநாகி வருகின்றுள்; அவள் வந்து அவன் பேசுவதைக் கேட்கிருள்.

சோதி. (முன்வந்து) டேய் சரிதானடா. அடுத்த கூட்டத்திலே பாத்துக்கொள்ளுவம் என்கிருய். போன கூட்டத்திலே மண்டை உடைஞ்ச புண் மாற இல்லே. சும்மா அங்கினே போய்ப் படிப்பிச்சுப்போட்டு "செத்தேன் சிவனே" எண்டு கிடக்காமல் கூட்டாளிமாரோடை கூடிக்கொண்டு போய் அடியும் உதையும் வேண்டிக்கொண்டு வாருய். பணக்காறரோடை எதிர்த்தால் அவங்கள் பின்னேச் சும்மா விடப் போருன்களே? பணம் வந்தால் மனிசன் என்னதான் செய்யமாட்டான். (பெருமூச்சு விடுகிருள்.) நாங்களும் இந்தச் சண்டையுக்கை ஊரை முறிச்சுக் காசைத் தேடி இருந்தால் உன்ரை கொம்மான் உப்பிடியும் செய்வாரே? நாங்கள் ஏளே எளியதுகள்; எங்களேக் கவனிக்கப்போகினமே? எங்கடை அவர் இருந்திருந்தால் உப்பிடியும் செய்துபோடுவினமே?

குமார. என்னணே அலட்டுகிருய்? சும்மா போய்க் கிடவன். சோறு காச்சி முடிஞ்சுதே?

சோதி. சும்மா கிடவடா; உனக்கும் ஏதும் விடிஞ்சது இருண்டது தெரியுமே? (பாலநாகரை நோக்கி) மெய்யே, தம்பி பாலநாகரே, நீ கேள்விப்பட இல்லேயே, அப்புக்காத்து வச்சிரநாகருக்கு உவன்ரை மாமன்ரை மோள் பரிமளத்தைக் கட்டப்போகினமாம்? அவனும் காசுக்காறன், இவனும் காசுக்காறன்; காசோடை காசு சேர்க்கிறதுக்குத்தான் உந்தவேலே.

பால. ஓமண்ணே! இதெல்லாம் காசின்ரை பெலன்தான்; உனக்காரணே இது சொன்னது? எப்பவாம் கலியாணம்?

சோதி. வெத்திலைக்கடையுக்கை பேசிறுளவை. அவளவை தான் என்னைப் பிடிச்சுக்கேட்டது: "ஏனணை உன்ரை மோனுக்கு அந்தப் பிள்ளையைக் கட்டயில்லை?" எண்டு. நான் ஒண்டும் பேசாமல் வந்திட்டன். பெரு மூச்செறிந்து) பணம் இல்லாதவர் பிணம்தான்.

## களம் 5

### இடம்: நாகநாடு, நாகபுரி, முடிநாகர்வீடு.

கமலநாகி ஒரு கதிரையில் இருந்து இரேந்தை பின்னிக் கொண்டிருக்கிறுள். பரிமளம் ஒரு புத்தகத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறுள். பக்கத்தில் வீணை ஒன்று உறைக்குள் இருக்கின்றது. கமலம் தனது இருக்கையை விட்டு எழுந்து அவ் வீணையில் படிந்து இருக்கும் மாசுகளைத் துடைக்கின்றுள்.

கமல. (பரிமளத்தை நோக்கி) என்ன பரிமளம், வீணை தூசி பிடிச்சுப்போச்சு? ஏன் இப்ப கவனிக்கிறயில்லை? அடிக்கடி எடுத்துத் தட்டிப் பாடிப் படிச்சுக்கொண்டிருக்கிறனி, இப்ப ஒரு சிலமனையும் காணயில்லை. இண்டைக்கு ஒரு பாட்டுப்பாடன் கேட்டுப்பாப்பம்.

பரிமள. என்ன, பாட்டும் கீட்டும். சும்மா போ கமலம். (சிறிது யோசித்துவிட்டு) அல்லாட்டால், இஞ்சை கொண்டா ஒருக்கா.

(சோகமான பாட்டு ஒன்றைப் பாடுகிறுள்)

கமல. (பாட்டு முடிந்ததும்) இந்தப் பாட்டிலை இருந்து தெரியுது இப்ப உன்ரை மனநிலை அவ்வளவு நல்லாய் இல்லை எண்டு. என்ன அவ்வளவு துக்கம்?

பரிமள. அப்பிடி ஒண்டும் இல்லே; சும்மா பாடினன். அந்தப் பாட்டு அப்பிடியான பாட்டு.

கமல. விடுவிடு, எனக்கே சொல்லிருய்? மனதிலே உள்ளது தான் பாட்டிலும் வெளிவாறது. இராத்திரியும் நித்திரையிலே ஒளும்பி அலட்டினுய்; என்ன அவ்வளவு மனக்குளப்பம்? தக்க இடத்திலே கலியாணமும் வந்திருக்குது; நல்ல சந்தோஷமாக இருக்கவேண்டிய நீ உப்பிடி மனக்குளப்பத்தோடை இருக்கிறதுக்கு என்ன காரணம்? சும்மா ஒளிக்காமல் சொல்லு; நான் ஒருதருக்கும் சொல்லமாட்டன்.

பரிமள எல்லாரும் அப்பிடித்தான் எண்ணுகினம். எனக்கோ ஒண்டும் சொல்லிக்கொள்ள முடியஇல்லே. என்னமோ ஒண்டு மனதுக்கை தட்டிக்கொண்டு இருக்குது. விதியை வெல்ல ஆர்தான் முடியும் கமலா? நடக்கிறது நடந்தே தீரும். அதுக்கு நாம் என்ன செய்யிறது?

# உறுப்பு III

## களம் 1

### இடம்: நாகநாடு, நாகபுரி, முடிநாகர் வீடு.

பரிமளநாகியும் கமலநாகியும் வீட்டிலே இருக்கைகளில் அமர்ந்திருந்து ஒரு கடுதாசிக் கூட்டத்தை வைத்துச் சாத்திரம் பார்க்கிறார்கள். அப்போழுது முடிநாகர் கையில் ஒரு மாலை யுடன் அவசரம் அவசரமாய் உள்ளே வருகிறார்.

**முடிநா.** எடி பிள்ளை! அம்மா எங்கை?

**பரிமள.** அவ அடுப்படியுக்கை. (குரலை உயர்த்தி) அம்மா! அம்மா!! ஐயா வந்திட்டார்? வரட்டாமாம்.

**அன்ன.** வந்திட்டனடி பிள்ளை. (வந்து முடிநாகரைப்பார்த்து) என்ன வேளையோடை வந்திட்டியள்; கையிலை என்ன?

**முடிநா.** என்ன தெரியஇல்லையே? மாலை—பூமாலை. ஏன் தெரியுமே?

**அன்ன.** தெரியுது, தெரியுது. அப்ப அப்புக்காத்தருக்குத் தான் வெற்றியோ? (மகளைப் பார்த்துச் சிரிக்கிறாள்)

**முடிநா.** எனக்கு நிக்க நேரமில்லை. கூட்டத்துக்கு ஓட வேணும். அப்புக்காத்தருக்கு முதல்முதலாக மாலை போட என்னைத்தான் பிடிச்சிட்டான்கள். கூட்டத் திலை ஒளும்பிப் பேசவும் வேணுமாம். (அன்ன நாகியைப் பார்த்துத் தன் நெஞ்சிலே தட்டி) ஒரு மாதிரி என்னைக் குறைவாய்ப் பேசினாய், இப்ப தெரியுதே முடிநாகன்ரை கெட்டித்தனம்?

**அன்ன.** சரி சரி, போட்டுவாருங்கோ. அதை ஏன் பேசுவான்? உங்கடை பாடு வெட்டு விதைப்புத்தான்.

முடிநா. பிள்ளைக்கு வெள்ளி துலாத்திலே எண்டு சொன்னேனே இல்லையோ? சரி அது போகட்டும்; இண்டைக்கு அஞ்சாறு பேர் சாப்பாட்டுக்கு வந்தாலும் வருவான்கள்; ஆயித்தமாக இருந்துகொள்; வந்தாப் போலை புறுபுறுத்துக் கறகறக்காதை. (போகின்ருர். அன்னநாகி உள்ளே போகின்ருள்.)

கமல. (பரிமளத்தைப் பார்த்து) என்ன பரிமளம்? உன்பாடு குருசந்திர யோகந்தான். இனி என்ன? எம். பி. யினரை பெண்சாதிதானே? மற்றவையைப் போலை பெரிசாக வந்தால் கண் மறைஞ்சு போகப்படாது; எங்களையும் இடைக்கிடை கவனிச்சுக்கொள்ள வேணும்.

பரிமள. சரி, அதுக்கு ஒண்டும் பயப்பிடாதை; அப்பிடி நான் செய்யமாட்டன். சரி, இப்ப எனக்கு ஒரு உதவி செய்யமாட்டியோ?

கமல. என்ன அது? உனக்குச் செய்யாததை வேறை ஆருக்குச் செய்யிறது.

பரிமள. (உடனே போய்ப் பெட்டியைத் திறந்து அங்கு இருந்து ஒரு தவாலை எடுத்து அவளிடம் கொடுத்து) இதை ஒருக்கால் எப்பிடியெண்டாலும் அனுப்பிவிடு. (கமலம் விலாசத்தைக் கூர்ந்து நோக்கிவிட்டுப் பரிமளத்தைப் பார்க்கின்ருள்.) என்ன பாக்கிருய்? அனுப்பத் தவறிவிடாதை.

கமல. ('விளங்குகிறது' என்னும் பாவனையாய்த் தலையை அசைத்துவிட்டு) சரி, செய்யிறன் அப்பா; ஏதோ உன்ரை விருப்பம்.

## களம் 2

இடம்: **நாகநாடு, நாகபுரி, முடிநாகர்வீடு.**

அப்புக்காத்தருக்குத் தேநீர் கொடுப்பதற்காக மேசைகள், கதிரைகள் ஒழுங்காக வைக்கப்பட்டிருக்கின்றன. முடிநாகர் தன் மனைவியைக் கூப்பிடுகின்றார்.

**முடிநா.** இஞ்சார், கேட்டியே, தேத்தண்ணி கேக்கு எல்லாம் ஆயித்தம் தானே? இஞ்சை ஆக்கள் கனக்க வராயினம். அப்புக்காத்தரும் பிறக்கிறாசி காளிங்க நாகரும்தான் வருவினம். அடியோடை ஒருதரும் இல்லாமல் இருக்கக்குடாது. பிள்ளையையும் கமல நாகியையும் ஒருக்கால் இஞ்சை வந்திருக்கச் சொல்லு.

**அன்ன.** அவள் இஞ்சை வந்திருக்க வெக்கப்படுகிறாள். நான் கேட்டால் வரமாட்டாள்; நீங்கள் ஒருக்காச் சொல்லிவிடுங்கோ.

**முடிநா.** (உரமாக) பிள்ளை, பிள்ளை பரிமளம், இஞ்சை ஒருக்கா வந்திட்.டுப்போ.

பரிமளம் வருகின்றாள்; அவளைக் கமலநாகி பின் தொடருகிறாள்.

**பரிமள.** எனையா கூப்பிட்டது?

**முடிநா.** இஞ்சை அப்புக்காத்தர் இண்டைக்கு டீக்கு (tea) வருகிறார் எண்டு தெரியுந்தானே. உள்ளுக்கை இராதை; நீயும் கூடவந்துநில். (கமலத்தை நோக்கி) அதோடை, பிள்ளை கமலம், நீயும் ஒருக்கா அவளுக்குத் துணையாக வந்து நிண்டுகொள். (காளிங்கநாகரும் அப்புக்காத்தர் வச்சிரநாகரும் வருகின்றனர். முடி

நாகர் அவர்களைப்போய் எதிரேற்று) வாருங்கோ, வாருங்கோ, உப்பிடி இருங்கோ.

அப்புக்காத்தரும் காளிங்கரும் ஒரு மேசைக்கருகில் இருக்கின்றனர். முடிநாகரும் அவர்களுடன் இருந்து கதைக்கின்ருர். கமலமும் பரிமளமும் வேறு ஒரு மேசைக்கருகில் இருக்கிருர்கள்.

(முடிநாகர் பெண்சாதியைக் கூப்பிட்டு) என் இருக்கிருய்? ஏதாவது இருந்தால் கொண்டுவந்து குடன். கேக்கும் கிடக்குத்தானே?

தேநீர் கேக்கு முதலியவற்றை அன்னம் கொண்டு வந்து கொடுக்கிருள்; எல்லாரும் சாப்பிடுகின்றனர்.

எண்டாலும் இருவத்திமூண்டு வோட்டாலை அடிச்சிருக்கிறம்; கொஞ்சம் கவலையீனமாய் இருந்தால் எங்கபாடு தொப்பிதான். மற்றப் பாட்டிக்காறர் என்னமாதிரி வேலைசெய்தான்கள்.

**காளிங்.** என்னெண்டாலும் எடுத்துப்போட்டம் தானே. இருக்கட்டும். இந்தமுறை பாளிமேந்திலை நல்லாக வேலை செய்தால், அடுத்தமுறை கொன்ரெஸ்ட் இல்லாமல் அப்புக்காத்தரைப் போகச்செய்யலாம்.

**வச்சிர.** ஏதோ நான் ஊர் நன்மைக்காகத்தானே வெளிக்கிட்ட நான். இருந்து பாருங்கோ நான் என்ன வேலை செய்யிறன் எண்டு.

**காளிங்.** அது இருக்க, என்ரை மனதுக்கை ஒரு யோசினை ஓடுதய்யா. என்னெண்டால் நாகர்சாதியுக்கை எலெச்சனிலை வெண்டவன்களுக்குள்ளை, மிகுதியாக நாகர் காங்கிரசும் இடதுசாரிக் கட்சியுமாக இருக்க, அப்புக்காத்து ஐயாதான் சுயாதீனக் கட்சிக்காறர். அதோடை, பெரும்பான்மைச் சாதியான அவுணருக்கையும் பவறிலை இருக்கிற பொலிற்றிசன்

களுக்குள்ளே இவருக்குப் பெரிய நடப்பு. இனிமேல் பாளிமேந்திலே வரப்போற மந்திரிசபை டிெமொக்கிறற்றிக் (democratic) எண்டு காட்டிறதுக்கு அதுக்குள்ளே ஒரு நாகர் மெம்பரை எண்டாலும் மந்திரியாக்க வேணும். அதனுலே இவருக்கு மந்திரியாகிறதுக்கு ஒரு பெரிய சான்ஸ் இருக்கு.

வச்சிர. ஏன்.... அப்பிடிச் சொல்லிறியள்?.... எனக்கு இந்தப் பெரிய எண்ணம் ஒண்டும் இல்லை; சும்மா ஊருக்கு நன்மை செய்தால் போதும்.

முடிநா. சீச்சீ, அப்பிடிச் சொல்லப்படாது பாருங்கோ. உங்களுக்கு வாற பெருமை உங்களுக்கு மட்டுமல்ல, எங்கள் எல்லோருக்கும்தான். உப்பிடி வாறதை விடக்குடாது.

இவர்கள் இப்படிப் பேசிக்கொண்டு இருக்க, அன்னநாகி வீட்டுக்குள் இருந்து மகளைக் கூப்பிடுகின்ருள்.

பரிமள. என்னம்மா அது? (எழுந்து தாயிடம் போகின்ருள்.)

அன்ன. (சிறிது முன்வந்து பரிமளத்திடம் ஒரு கடிதத்தைக் கொடுத்து) இதை உன்ரை கொலிச்சுப் பிறின்சுப்பல் அனுப்பினதாம்; அடுத்தவீட்டுப் பொடியன் கொண்ணந்து தந்துவிட்டுப் போகுது.

பரிமள. ஏதோ பிறைஸ்கிவிங் (prize giving) ஆக்கும்.

அன்னநாகி உள்ளே போகின்ருள். பரிமளம் கடிதத்தை உடைத்து வாசிக்கின்ருள். கமலநாகியைப் பார்த்துத் தலையை அசைத்துவிட்டு உள்ளே போகின்ருள்.

காளிங். இண்டைக்கு நாகபுரிக் கோட்டிலை (courts) உள்ளவர்கள் எல்லாரும் அப்புக்காத்தருக்கு ஒரு டின்னர்

வைக்கப்போகினமாம்; அதுக்குப் போய் ஆயத்தஞ் செய்யவேணும்; அப்ப நாங்க வாறம் பாருங்கோ. (அவரும் வச்சிரநாகரும் எழுந்து நிற்கின்றனர் பின்பு முடிநாகரைப் பார்த்து) இஞ்சை, அவர் ஏதோ உங்கடை மகளுக்குக் குடுக்கக் கொண்டுவந்திருக்கிருராம். வரச் சொல்லுங்கோ, அவரே தன்ரை கையாலை குடுத்திடட்டுக்கும்.

முடிநா. (திரும்பிப்பார்த்து) உங்கினை நிண்டாள். (கமலத்தைப் பார்த்து) பிள்ளை எங்கை போனவள்?

கமல. அறைபுக்கை போட்டா.

முடிநா. பிள்ளை, பிள்ளை, (உரக்க) பிள்ளை (மறுமொழி யில்லை) எங்கை இவள்? (அன்னத்தைக் கூப்பிட்டு) இஞ்சார், அவள் பிள்ளையை ஒருக்கா வரச்சொல்லு.

அன்ன (வெளியே வந்து) உங்கைதானே நிண்டாள்.

முடிநா சீ, இஞ்சை இல்லை, உங்கான் வந்திட்டாள்.

அன்ன. (தேடி, பின் திரும்பிவந்து) இஞ்சை ஒரிடமும் காணயில்லை; எங்கை போனவள்?

அன்னம் தேடிக்கொண்டு போகின்ருள். இப்படி இவர் கலவரப்படுகையில் காளிங்கநாகர் ஒரு பக்கத்தில் தவால்ஒன்று இருக்க எடுத்துத் திறந்து வாசிக்கிருர்.

காளிங். என்ன இது! இதிலை ஒரு துண்டு இருக்கு, இதைப் பாருங்கோ (முடிநாகரிடம் கொடுக்கிருர், முடிநாகர் வாசிக்கின்ருர். "என்னை ஒருதரும் தேடவேண்டாம், நான் அத்தான்வீட்டை போறன்—பரிமளம்.")

முடிநா ஒகோ! உதோ சங்கதி. உதுக்குச் செய்யிறன் வேலை. குடிக்குப் பளிவைச்சிட்டுப் போட்டாள். எனக்குத் தலை இடிக்குது, ஒண்டும் தெரியயில்லை.

**காளிங்.** சரி, இதுக்கு வேறை என்ன செய்யிறது. போலிசிலை என்றிபோட்டு ஆளைப் பிடியுங்கோ. வாறதைப் பிறகு பாத்துக்கொள்ளுவம். சரி, அப்ப நில்லுங்கோ; நாங்கள் போட்டுவாறம்.

காளிங்கநாகர் முன்னே போகின்றார்; அப்புக்காத்தர் தலை கவிழ்ந்தபடி அவரைப் பின்தொடருகிறார்.

## களம் 3

இடம்: **நாகநாடு, நாகபுரி, அப்புக்காத்து வச்சிரநாகர்வீடு.**

காளிங்கநாகரும் வச்சிரநாகரும் ஆழ்ந்த யோசனையில் இருக்கின்றார்கள்.

**காளிங்.** என்னகாணும், எலெச்சன் சரியாக வந்துது; மற்றதெல்லோ பிளைச்சுப்போச்சு.

**வச்சிர.** அதுதான் நல்லது; போனது போகட்டுங்காணும். இப்ப பாளிமேந்துக்கை உள்ளட்டிட்டன். இனிமேல் உப்பிடி எத்தினை வரும். நல்ல ஆறுதலாய்ப் பாத்து ஒண்டை எடுக்கலாம். அதோடை மந்திரியாக வந்தால் இலட்சம் இலட்சமாகக் கொண்டுவந்து சீதனம் கொட்டுவாங்கள். சாய், இவ்வளவு பெரியாளாகிய என்னை விட்டுவிட்டுப் போகவோ?

**காளிங்.** அதுகும் உந்தக் குட்டிச் சட்டம்பியிட்டை.

**வச்சிர.** அதுதான்காணும் பெரிய அதிசயமாக இருக்கு. சரி, இவளின்ரை வேலைக்கும், குமாரநாகன்ரை கெறுக்குக்கும் செய்யிறன் வேலை பார். பாளிமேந்திலை இரண்டு கேள்விகேட்டு, உவாத்திமாற்றை சம்பளத்தைக் குறைச்சுவிடுறன்.

காளிங். நான் பாக்கிறமாதிரியிலே, முடிநாகனும் ஒரு கள்ளன் போலேதான் இருக்கு. அவனும் சேந்துதான் இந்த வேலைபோலே கிடக்கு.

வச்சிர. (தலையசைத்து) இருக்கும் காணும் இருக்கும். உந்த நாகப்படையளின்ரை வேலை உப்பிடித்தானே. பொல்லாத தந்திரியள். சொல்லிறது ஒண்டு செய் யிறது ஒண்டு.

காளிங். இல்லாட்டாப் பாருங்கோ, அந்தப் பெட்டை ஒரு மைனர் தானே. ஒருதனோடை ஓடிவிட்டாள் எண்டு விட்டிட்டு இருக்கிறதே. காபியஸ் கோப்ப சின்படி (habeas corpus) உடனே விருந்துவிட்டு, பிடரிப்பிடியாப் பிடிச்சு வந்திடலாம். அவனையும் ஆறு மாதத்துக்கு அனுப்பிவிடலாம்.

வச்சிர. சரி, போகட்டும். சனி துலைஞ்சுது சந்தையிலே. எல் லாம் நல்லதுக்குத்தான்.

## களம் 4

### இடம்: நாகநாடு, நாகபுரி, சுந்தரநாகி வீடு.

சுந்தரநாகி ஏதோ எழுதிக்கொண்டு இருக்கிருள். அப் பொழுது அப்புக்காத்து வச்சிரநாகர் உள்ளே வருகின்ருர்.

சுந்தர. Take your seat please. (வேண்டா வெறுப்புடன் வச்சிரநாகர் ஓர் ஆசனத்தில் அமர்ந்து ஏதோ யோசித்துக்கொண்டு இருக்கிருர்.) என்ன வந்தது?

வச்சிர. இல்லை, இல்லை, ஒண்டும்இல்லை. சும்மா காண வந்தனுன்.

சுந்தர. மற்றப் புதினங்கள் எல்லாம் எப்பிடி? உங்களுக் கென்ன? நினைச்சமாதிரி எம். பி. யாகியும் விட்டியள்.

அடுத்தபடி ஒரு மந்திரிப் பதவிதானே? அவுண ருக்கையும் உங்களுக்கு நல்ல நடப்பு. அதிஞலே மந்திரிப்பதவியும் வந்திடும்.

வச்சிர. ஆனல் ஒரேஒரு குறைதான் உண்டு.

சுந்தர. அது என்ன அது?

வச்சிர. என்ன தெரியாததுபோலப் பேசிருய்? தலைமேல் இருக்கிற பாரங்களைத் தூக்க உதவிபண்ண ஒருதரும் இல்லை. இதெல்லாத்தையும் தனியத் தூக்குவனே எண்டுதான் ஐமிச்சம். உன்னைப்போலை ஒரு ஆள் தான் இப்ப எனக்கு வேண்டியிருக்கு. இதுதான் இப்ப இருக்கிற குறை.

சுந்தர. ஓகோ! அதுக்குத்தானே மூடிநாகருடைய மகளைத் தேடிப் போனீர்?

வச்சிர. சீச்சீ, அதுக்கு நான் போகஇல்லை. அது சும்மா எலெச்சன் வெல்லிறதுக்காக வெல்லோ ஓமெண்ட ஞன். எலெச்சனெண்டால் ஒரு செப்படிவித்தை. அதுக்கு எத்தனை விதமான தந்திரம் தேவை. உண்மையான உணர்ச்சிகளைக்கூட மறைக்கவேண்டி யிருக்குது.

சுந்தர, அப்பிடியாஞல் என்னை என்ன செய்யச் சொல் லிறியள்?

வச்சிர. ஒண்டும் இல்லைச் சுந்தரி, உனக்கு நல்லாய்த் தெரியும் உன்மேல் நான் எவ்வளவு காதலோடு இருக்கிறன் எண்டு. இவ்வளவு காலமும் உனக்குப் பிறகும் முன் னும் திரிஞ்சது என்னத்துக்கெண்டு நினைக்கிருய்? எனக்குத் தகுந்தவள் நீ எண்டு எப்பவோ முடிவு கட்டிவிட்டேன். தந்திரமாக நிண்டு எலெச்சன்

வேண்டிட்டன். அதனுல் வருகிற பெருமையை அனுபவிக்கத் தகுந்தவள் நீயேதான். என்னுடைய உள்ளத்தில் உன்னையன்றி வேறு எந்தப் பெண்ணுக்கும் இடம் கொடேன். நீயே சகலதும் எனக்கு. நான் வெறும் உடல்—நீதான் எனது உயிர். உயிர் இல்லாது உடம்பு இயங்குவது எப்படி? நினைத்துப் பார். ஆசையால் மறுக்காதே. ஓம் என்று ஒரு வார்த்தை சொல்லு. அப்போதுதான் என் சிந்தை மகிழும்.

சுந்தர. சீச்சீ, நான் உம்முடன் கூடித் திரிந்ததைத் தவருக விளங்கிவிட்டீர் போலும். எங்களுடைய நட்பை நான் ஒரு இன்ரெலெக்சுவல் கொம்பானியன்சிப் பாகவே (intellectual companionship) பாராட்டி வந்தேன். நீர் எண்ணியதுபோல் நான் கனவிலும் எண்ணவில்லை. அதோடு ஒரு ஆடவனுக்கு அடிமைப் பட்டு, நான் மகிமை இன்றிக் கிடக்கவும் எண்ண வில்லை. வானவீதியில் மகிழ்ச்சியோடு பாடிக் கொண்டு எங்கு வேணும் என்ருலும் அங்குசெல்லும் வானம்பாடிப் புள்ளுப்போல நானும் சுயேச்சை யோடு இருக்க விரும்புகிறேன். வாழ்வு என்ருல் எனக்குப் பிடிக்காது. இது நிச்சயம்; இது சத்தியம்.

வச்சிர. ஒரு கணவனுக்கு ஒரு பெண் வாழ்க்கைப்பட்டிருப் பதை நீ அடிமை என எண்ணுகிருயா? அது தப் பான எண்ணம், அது அடிமை அன்று. ஆண் இன்றேல் பெண் இல்லை; பெண் இன்றேல் ஆண் இல்லை. இரண்டும் ஒன்று சேராவிட்டால் இயற்கை இயங்காது. உலகமும் இல்லை; வாழ்க்கை யும் இல்லை. எல்லாம் ஒழிந்துவிடும். மணம் என்பது

இயற்கை அன்னையின் திருவிளையாட்டல்லவா? காதல் என்பது அவ்விருவரையும் பிணித்துக் கட்டும் இன்பக் கயிறல்லவா? நீ ஏன் இயற்கைக்கு மாறாய் இருக்க நினைக்கின்றனை? அது சரியில்லை. என்மீது இரங்கு. நான் உன் அடிமை. நான் உன்னை வேண்டு கின்றேன்.

சுந்தர. இந்தப் பெரும் பேச்செல்லாம் போதும்; வேறை யாருக்கு என்றாலும் கொண்டுபோய்ச் சொல்லும் எனக்கு வேண்டாம். என் எண்ணத்தை ஒரு வரும் மாற்றமுடியாது. இனிமேல் இப்படிப் பேசு வது வீண்; போய்வாருங்கள். எனக்கு வேலை இருக் கின்றது.

வச்சிர. இது நிச்சயமா? அப்ப நான் போகலாமா?

சுந்தர. ஓம், தாராளமாகப் போகலாம்.

வச்சிரநாகர் போகின்றார். அவள் அவரைக் குறித்துத் துயரோடு பார்த்துக்கொண்டு நிற்கின்றாள்.

## களம் 5

இடம்: நாகநாடு, நாகபுரி, குமாரநாகர் வீடு.

சோதிநாகி பாக்கு வெட்டிப் போட்டுக்கொண்டு இருக் கின்றாள். அப்பொழுது முடிநாகரும் அவர் மனைவி அன்ன நாகியும் வருகின்றனர். சோதிநாகி எழுந்து வியப்புடன் அவர் களைப் பார்த்துக்கொண்டு நிற்கின்றாள்.

அன்ன. ஏனணை மச்சான், பேசாமல் நிற்கிறாய்? வழிமாறி வந்திட்டம் எண்டு நினைக்கிறியோ?

சோதி. இல்லை இல்லை, கனநாள் இவடத்துக்கு வந்து; அது தான் என்னவாய் இருக்கும் எண்டு யோசிச்சுக் கொண்டிருந்தன். ஏன் நிக்கிறியள்? இருங்கோவன்.

முடிநா. என் தங்கச்சி, பிள்ளையும் தம்பியும் எங்கை? உள்ளுக்கை இருக்கினமே?

சோதி. இல்லை யண்ணை. உங்கை உதிலான் போட்டினம்; இப்ப வந்திடுவினம், இருங்கோ. (வெற்றிலைத் தட்டத்தை முடிநாகருக்குமுன் கொண்டுபோய் வைத்து) வெத்திலை போடுங்கோ அண்ணை.

குமாரநாகரும் பரிமளமும் ஒருவர் பின் ஒருவராய் வருகின்றனர்.

முடிநா. (அப்பொழுது) வாருங்கோ பிள்ளையள்.

அன்ன (மகளுக்கருகில் ஓடிப்போய்) நல்ல வேலை செய்திட்டாய் மோனை. ஏதோ நாலுபேற்றை கைக்கு வாய்க்குத் தப்பி நல்லாய் இருக்கவேணும். (மேலே பார்த்து) நாகதம்பிரானே, உனக்கே அடைக்கலம். நீதான் துணை.

திரை

# பின்மொழி

முனிவர் தன் சுக்குமாந்தடியோடு வருகின்ருர். வந்து அவையிலுள்ளோரைப் பார்த்துப் பின்வருமாறு பேசுகின்ருர்:

மாந்தர்களே! இங்கு நாகபுரியில் நடந்தவற்றை இதுகாறும் பார்த்து இன்புற்றீர்கள். இப்பொழுது யான் புவர்லோகம் போகவேண்டி இருக்கின்றது. பல நாழிகையாய் உங்களை இங்கு நாகநாட்டில் தங்க வைத்து விட்டேன். எனக்கும் நேரமாகிவிட்டது. நீங்களும் போய்வாருங்கள். வணக்கம்.

சுக்குமாந்தடியைச் சுழற்றுகின்ருர்.

திரை

தவருன எண்ணம்

முற்றும்